# இது ஆர்.எம்.வீ. சீசன்!

**நாஞ்சில் மனோகரன் கூறுகிறார்:**

"மந்திரிகளைத் தமது இஷ்டப்படி தூக்கி எறிவது, பின்னர் சேர்த்துக் கொள்வது, இலாகாவைப் பிடுங்குவது, அவமானப் படுத்துவது, இதெல்லாம் எம்.ஜி. ஆருக்குச் சகஜமான ஒன்று. அ.தி.மு.க.வில் இருப்பவர்களுக்கும் விவஸ்தை கிடையாது. எஜமானர் எப்போது பிஸ்கெட் கொடுப்பார் என்று காத்திருப்பது போலக் காத்திருப்பார்கள்; காலால் எட்டி உதைத்தாலும், உதைத்த காலையே சுற்றி வந்து வணங்குவார்கள். இந்தச் சூழ்நிலையில் எம்.ஜி.ஆர். எதையும் செய்வார்.

எனக்குக் கிடைத்திருக்கும் தகவலின்படி, ஒரு கட்டத்தில் மூன்றில் ஒரு பகுதி எம்.எல். ஏக்களைச் சேர்த்துக் கொண்டு விலகத் துணிந்தவர் வீரப்பன். பிறகு ஆவேசம் தணிந்து அடங்கியிருந்தார். அவருக்குத் தான் இப்போது மீண்டும் பதவி!

எம்.ஜி.ஆர் ஊரில் இல்லாத போது இலங்கைப் பிரச்னை முற்றி விட்டது; வன்னியர் போராட்டமும் விசுவரூபம் எடுத்தது. இந்த விஷயங்களில் பண்ருட்டி சரியாக இயங்கவில்லை என்று எம்.ஜி.ஆர். கருதுவதால், பண்ருட்டியிடம் இருந்து இலாக்காக்கள் பறிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் நாளைக்கே இன்னும் அதிக செல்வாக்கு உள்ள இலாக்காவை பண்ருட்டிக்கு எம்.ஜி.ஆர். கொடுத்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை! யார் கண்டது, ஆர்.எம்.வீக்கு மீண்டும் பதவி கொடுத்த அதே சமயத்தில் ஜெயலலிதா ஆதரவாளர்களான சில மந்திரிகளுக்கு அடுத்த சில நாட்களில் கல்தா கொடுக்கப்படலாம்! எம்.ஜி.ஆர். எதை வேணுமானாலும் செய்வார்!

1984 தேர்தலின் போதே தமக்கு வேண்டிய ஆட்களாகப் பார்த்து ஸீட் கொடுத்து பலரை எம்.எல்.ஏக்களாக உருவாக்கியிருக்கிறார் ஆர்.எம்.வீ. பின்னொரு காலத்தில் ஆர்.எம்.வீயா அல்லது ஜெயலலிதாவா என்று வரும்போது ஆர்.எம்.வீக்கு ஆதரவாக இவர்கள் வருவார்கள் என்பதில் சந்தேகமில்லை.



யார் எம்.ஜி.ஆருக்கு ஆலோசனை சொல்கிறார்கள் என்று பலர் வியப்புடன் கேட்கிறார்கள். தமிழ்நாட்டில் யார் ஆலோசனையையும் எம்.ஜி.ஆர். கேட்பவர் அல்ல! ஆனால் மத்தியில் யார் பிரதமராக வந்தாலும், அவர்களைப் பகைத்துக் கொள்ளாமல், அவர்கள் இஷ்டத்துக்கு வளைந்து கொடுப்பவர் எம்.ஜி.ஆர்.

எம்.ஜி.ஆரின் பல செய்கைகளுக்குக் காரண காரியங்களைக் கற்பித்துக் கொண்டு போனால் நமக்குப் பைத்தியம் பிடித்து விடும்! மொத்தத்தில் எம்.ஜி.ஆரின் செய்கைகளுக்கு இலக்கணமே கிடையாது.

**ஆலடி அருணா (அ: இ. அ. தி. மு. க. நாடாளுமன்ற உறுப்பினர்):**

மந்திரிகளை நியமிப்பதற்கும், எடுப்பதற்



கும் முதல்வருக்குப் பரிபூரண உரிமை உண்டு. இலங்கைப் பிரச்னை, வன்னியர் போராட்டம், என்று பல பெரிய பிரச்னைகள் இருக்கும் இந்த சமயத்தில். ஆர்.எம். வீயை முதல்வர், மந்திரி சபையில் சேர்த்துக் கொண்டது குறிப்பிடத்தக்கது. நாற்பது வருட காலம் முதல்வருடன் சேர்ந்து பணியாற்றும் வாய்ப்பைப் பெற்ற ஆர்.எம்.வீ. முதல்வரின் நம்பிக்கைக்குரிய முக்கியமான தம்பிகளில் ஒருவர். அவரை மீண்டும் மந்திரி சபையில் சேர்த்துக் கொண்டதற்காக முதல்வருக்குக் கட்சியில் உள்ளவர்கள் மட்டுமல்ல, பொதுமக்களும் நன்றி சொல்ல வேண்டும்!

**— கௌசல்யா**

புகைப்படங்கள்: **சுபா**

## ஆர். எம். வீ. வீட்டில்......

**ஆ**ர். எம். வீ. அவர்களை நியமனம் செய்யப் போவதாக அறிவிப்பு வந்ததிலிருந்தே அவர் வீட்டில் அலை, அலையாய்க் கூட்டம். போக்குவரத்து நெருக்கடி ஏற்படுத்தக் கூடிய அளவுக்குக் கார்கள், அதிகாரிகளும், தொண்டர்களும், அ.தி. மு. க. தலைவர்களும், மாலையும் கையுமாக ஆர். எம். வீ. யைச் சந்திக்கச் செல்கிறார்கள்.

எந்தவித பந்தாவும் இல்லாமல், வழக்கமான அடக்க தோரணையுடன், ஆர். எம். வீ. மாலை மரியாதைகளை ஏற்றுக் கொள்கிறார்.

''அண்ணனைத் தலைவர் கைவிட மாட்டார்.''

''அண்ணன்தான் தலைவருக்கு வாரிசு.''

— தொண்டர்கள் மத்தியில் பேச்சு.

உள்ளே ஆர். எம். வீ. எதிலும் பட்டுக் கொள்ளாமல் வந்தவர்களிடம் சொல்கிறார்: ''மழை ஸீஸன் ஆரம்பிச்சுடுச்சு போலிருக்கு!''

அ. தி. மு. க. விலும், ஆர். எம். வீ. ஸீஸன் ஆரம்பித்துவிட்டது போலும்.



ஆர்.எம்.வீ.



''எம்பா வழக்கமா வர்ற ஆளுக்குப் பதிலாப் புதுசா நீ வந்து பிச்சை கேக்கறே.''

''இந்த ஏரியாவை மூணுமாசத்துக்கு நான் 'லீஸ்'க்கு எடுத்திருக்கேன் தாயே.''

— சேந்தூர் அன்பழகன்.



லாபரோஸ்கோபி அறுவைச் சிகிச்சை நடைபெறு கிறது.

அரசாங்கம் நடத்தும் குடும்பக் கட்டுப்பாடு அறுவைச் சிகிச்சை முகாம்களிலோ, அரசாங்க மருத்துவ மனைகளிலோ கு. க. அறுவைச் சிகிச்சை செய்து கொண்ட பலருக்கு இந்த அறுவைச் சிகிச்சைக்குப் பிறகும் குழந்தை பிறப்பது சகஜமாகி வருகிறது.

இதற்கான காரணங்கள் என்ன என்பதை ஆராய்ந்த போது......

# கு.க. ஆபரேஷன் தோல்வியடைவதேன்?

தற்போது பெண்களுக்குக் குடும்பக் கட்டுப்பாடு அறுவைச் சிகிச்சை, பெரும்பாலும் லாபரோஸ்கோப் என்ற கருவியைக் கொண்டு எளிய முறையில் செய்யப்பட்டு வருகிறது. இம்முறையில், லாபரோஸ்கோப்பைக் கொண்டு வயிற்றுப் பகுதியில் ஒரு சிறிய துளை செய்து, கருத்தரிப்புக் குழாய்கள் இரண்டையும் இணைத்து ஒரு கிளிப்பைப் பொருத்தி, விந்துவிலுள்ள உயிரணுக்கள் கரு முட்டையைச் சென்றடைவதைத் தடுக்கிறார்கள். லாபரோஸ்கோப் கருவியின் ஒரு முனை இந்தக் கிளிப்புடன் கூடிய கூரிய முனை. மற்றொரு முனையில் ஒரு wide angle lens, பொருத்தப்பட்டிருக்கும். இந்த லென்ஸ் வழியே நோக்கி, வயிற்றைக் கிழிக்காமலே இந்த அறுவைச் சிகிச்சையை முடித்துவிட முடிகிறது. இந்த அறுவைச் சிகிச்சை செய்து கொள்பவர் காலையில் மருத்துவ மனைக்கு வந்தால் மாலையில் வீடு திரும்பி விடலாம். இந்தச் சௌகரியங்கள் கருதி இம்முறை பிரபலமாகியிருப்பதோடு, இதனைச் செய்து கொள்வோருக்கு அரசாங்கம் ஊக்கத் தொகையும் அளித்து வருகிறது.

ஆனால், லாபரோஸ்கோபி முறையில் தோல்வி விகிதாச்சாரம் அதிகம். காரணம், அனுபவம் குறைவாக உள்ளவர்கள் இந்த அறுவைச் சிகிச்சையைச் செய்யும் போது கிளிப்பைச் சரியாகப் பொருத்துவதில்லை. சரியான முறையில் பொருத்தப்பட்டாலும் கிளிப் அகன்றுபோய் விழுந்து விடுவதற்கான சாத்தியக் கூறுகள் நிறையவே உள்ளன. மேலும், கருத்தரிப்புக் குழாய்களை ஒத்த வேறு இரு குழாய்களும் அவற்றுக்கு வெகு சமீபத்தில் உள்ளன. அனுபவமில்லாத அல்லது அவசரத்துடன் செயல்



* லாபரோஸ்கோபி அறுவைச் சிகிச்சைக்குப் பின் ஓய்வெடுத்துக் கொள்ளும் தாய்மார்கள்.

படுகின்ற மருத்துவர்கள் இந்தக் குழாய்களை இணைத்துக் கிளிப் போட்டுவிடுகிறார்கள். உயிரணுக்கள் வழக்கம்போல் இயல்பாகக் கருத்தரிப்புக் குழாய்கள் மூலம் பிரயாணம் செய்து கர்ப்பம் ஏற்படுத்தி விடுகின்றன!

எனவே லாபரோஸ்கோப் முறையைத் தவிர்த்து, ஒன்று அல்லது இரண்டு குழந்தைகள் பிறந்த பின் முதல் வாரத்துக்குள்ளாக டியூபெக்டமி எனப்படும் அறுவைச் சிகிச்சை முறையை மேற்கொள்வதே சிறந்தது.

டியூபெக்டமி செய்து கொள்பவர்கள் குறைந்தபட்சம் நான்கைந்து நாட்களுக்காவது மருத்துவ மனையில் தங்கியிருக்க வேண்டும். லாபரோஸ்கோபி முறையைப் போலன்றி இந்த அறுவைச் சிகிச்சை செய்ய, பெண்ணின் வயிற்றைத் திறந்து, கருத்தரிப்புக் குழாய்களை இணைத்துத் தைத்து விடுகிறார்கள். எனவே இம்முறை லாபரோஸ்கோபியைக் காட்டிலும் அதிக பாதுகாப்பானது. ஆனால் அனுபவம் இல்லாத டாக்டர்கள் இதிலும் தவறு செய்யக் கூடும். தவிர, சில சமயங்களில், தைக்கப்பட்ட இடத்தைச் சுற்றி வளைத்துக் கொண்டு ஒரு புதிய குழாய் வளர்ந்து, கருத்தரிப்பு ஏற்பட உதவுவதும் உண்டு! இது மிக அரிதானாலும் மனித ஆற்றலை மீறக் கூடிய இயற்கையின் சக்திக்கு உதாரணமாக இந்த விந்தை அபூர்வமாக நிகழவே செய்கிறது.



* லாபரோஸ்கோப் கருவியும் உபரி இணைப்புக் கருவிகளும்.

ஆண்களுக்குச் செய்யப்படும் வாஸெக்டமி அறுவைச் சிகிச்சையில் உயிரணுக்களை விந்துவில் கொண்டு சேர்க்கும் 'வாஸ்' என்ற மயிரிழை போன்ற உறுப்பு தைக்கப்படுகிறது. இந்த அறுவைச் சிகிச்சையும் அவசரமாகச் செய்யப்படுவதாலோ அனுபவம் அற்ற மருத்துவர்கள் செய்வதாலோ குளறுபடியாகி விடுகிறது. இந்த உறுப்பின் அருகே ஏராளமான குழாய்கள் ஓடிக் கொண்டிருக்கின்றன. சரியான குழாயைப் பொறுமையாகத் தேடிக் கண்டு பிடிக்க வேண்டும். ஆனால், குடும்பக் கட்டுப்பாடு முகாம்களில் ஒரே நாளில் பல நூறு ஆபரேஷன்கள் செய்யப்படும்போது, அவசரமும் அயர்ச்சியும் செயல்திறனைப் பாதிக்கின்றன. எனவே அறுவைச் சிகிச்சை குளறுபடியாகி விடுகிறது.

குடும்பக் கட்டுப்பாடு முறையைத் தம்பதிகளுள் கணவன் மேற்கொள்வதே விரும்பி, வரவேற்கத்தக்கதாகும். ஆனால் பெரும்பாலான பெண்கள் "பாவம், கணவர்! வேலைக்குப் போகிறார், உழைக்கிறார்! இந்தத் துன்பத்தை வேறு அவர் அனுபவிக்க வேண்டுமா? நானே ஆபரேஷன் செய்து கொள்கிறேன்" என்ற மனப்பான்மை உடையவர்களாகவே இருக்கிறார்கள். ஆண்கள் குடும்பக் கட்டுப்பாடு அறுவைச் சிகிச்சை செய்து கொண்டால் ஆண்மை இழந்துவிடுவார்கள் என்ற தவறான நம்பிக்கையும் பரவலாக நிலவுகிறது.

எல்லாவற்றையும் விட அபாயமற்ற, வெற்றிகரமான கு.க. முறை ஆண் உறைகளைப் பயன்படுத்துவதுதான். தரமான உறைகளைச் சரியான முறையில் பயன்படுத்தி வந்தால் கருத்தரிப்பு ஏற்படும் வாய்ப்பு காலே அரைக்கால் சதவீதம் கூட இல்லை. அபூர்வமாக ஒரு சிலருக்கு ரப்பரினால் ஒவ்வாமை ஏற்படுவதால் இந்த முறையைக் கையாள முடியாமல் போகலாம்.

பொதுவாகக் கு.க. முறைகளைக் கையாள விரும்புவோர் தாமாகவே நேரடியாக அரசாங்க மருத்துவ மனைக்கோ, தனியார் மருத்துவரிடமோ செல்வது நல்லது. இடைத்தரகர்கள் மூலமோ மூன்றாவது மனிதர் மூலமோ அரசு மருத்துவ மனைகளை அணுகினால், பணம் சம்பாதிக்கும் நோக்கமே மேலோங்கி உடல்வாகுக்கேற்ற கருத்தான்றிய கவனிப்புக் கிடைக்காமல் போய் விடுகிறது.

கருத்தடை முறைகளிலேயே மிகவும் மோசமானது, மிக மிக ஆபத்தானது, தர்மத்துக்குப் புறம்பானது, உயிர்க் கொலைக்குச் சமமானது அபார்ஷன்தான். கருத்தடை செய்து கொள்வதை வரவேற்கலாம்; கருவைக் கலைப்பதற்கு மன்னிப்பே கிடையாது.

— டாக்டர் திருமகள்,
டாக்டர் லக்ஷ்மி நாகராஜன்.
தொகுப்பு. எஸ். ஆர்.

## ஃபாரெக்ஸ்® முதலான விருப்பம்!

# பாப்பா வளர்ச்சிக்கான திட உணவுகளில் பாசத்தாய் அளிக்கும் முதலிடம் ஃபாரெக்ஸ்®

தாய், தன் குழந்தைக்கு தேர்ந்தெடுக்கும் முதலான திட உணவு புதிய செழுமையான ஃபாரெக்ஸ். காரணம்:

பாப்பாவின் உடல் நலத்திற்கான புரதமும், ஜீரணத்திற்கு உகந்த கொழுப்புச் சத்தும் சரியான அளவில் கொண்டது.

பாப்பாவுக்கு ஆரோக்கியமான ரத்தத்தை தரவல்ல இரும்புச் சத்துள்ளது.

எலும்பும் பற்களும் வலுவோடு வளர்ந்திட கால்சியமும் ஃபாஸ்ஃபரஸும் 2:1 என்ற அளவில் சேர்க்கப்பட்டது.

தின்னத் தெவிட்டாதது; கலப்பதும் கொடுப்பதும் எளிது.




பால் சேர்க்கத் தேவையில்லை!
நீருடன் கலந்து கொடுத்தாலே போதும்.

**தாயன்பைக் கூறிடும் தரமிக்க திட உணவு ஃபாரெக்ஸ்®**

CLARION/B/GX/15/203



# பாதாளச் சாக்கடை எனும் பலிபீடம்!

சென்னை அபிராமபுரத்தில் சில மாதங்களுக்கு முன் நடந்த நிகழ்ச்சி இது: அந்த வட்டாரத்தின் ஒரு பகுதியில் பாதாளச் சாக்கடையில் அடைப்பு ஏற்பட்டிருந்தது. அடைப்பை நீக்குவதற்காகச் சென்னை மாநகர் குடிநீர் வழங்குதல் மற்றும் கழிவு நீர் அகற்றுதல் வாரியத்தின் மூன்று ஊழியர்கள் வந்து சேர்ந்தனர். அவர்களுள் ஒருவர் தமது துணிகளைக் களைந்துவிட்டு ஜட்டி மட்டுமே அணிந்தபடி, தமது இடுப்பைச் சுற்றி ஒரு கயிற்றைக் கட்டிக் கொண்டார். கயிற்றின் ஒரு முனையைச் சக தொழிலாளியிடம் கொடுத்தார். பூமியைத் தொட்டு வணங்கிவிட்டுப் பாதாளச் சாக்கடைக்குள் இறங்கினார். சிறிது நேரம் சென்றது... சாக்கடைக்குள் எந்தவித அசைவும் தென்படவில்லை. வெளியே நின்றிருந்த ஊழியர்களுக்குச் சந்தேகம் தோன்றியது. கயிற்றை ஆட்டிப் பார்த்தபோது உள்ளிருந்தவர் பதிலுக்குக் கயிற்றை அசைக்கவில்லை. உடனே, வெளியே நின்றிருந்தவர்களுள் மற்றொருவரும் சாக்கடைக்குள் இறங்கினார். வெகு நேரம் ஆன பிறகும் அவ்விருவரும் வெளியே வராமல் போகவே, மூன்றுமவரான மாணிக்கமும் உள்ளே இறங்கினார். கொஞ்ச நேரம் சென்ற பிறகு, மாணிக்கம்

குற்றுயிரும் கொலையுயிருமாக வெளிப்பட்டார். அடைப்பு ஏற்பட்ட பாதாளச் சாக்கடையிலிருந்த விஷவாயுவைச் சுவாசித்ததால் அவருக்கு மூச்சுத் திணறிப் போயிருந்தது. மாணிக்கத்துக்கு முன்னால் சாக்கடையில் இறங்கிய செல்வராஜ், பொன்னுசாமி ஆகியோர் விஷவாயுவுக்குப் பலியாகிச் சாக்கடைக்குள்ளேயே இறந்து போயிருந்தனர். அவர்களுடைய உடல்கள் வெளியே எடுக்கப்பட்டன. மாணிக்கம், மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு ஒரு வாரப் போராட்டத்துக்குப் பிறகு இறந்து போனார்!

மேற்படி செய்தி நாளிதழ்களில் வெளியான போது, கம்ப்யூட்டர் யுகத்தில் அடியெடுத்து வைத்துவிட்ட நிலையிலும் நமது நாட்டில் இவ்வளவு அவலமான சாவுகள் ஏற்படுகின்றனவே என்ற சொல்லொணாத வருத்தம் ஏற்பட்டது. விஞ்ஞான முன்னேற்றத்தால் எவ்வளவோ நாகரிகம் அடைந்துவிட்ட நமதுவாழ்க்கையில்,சாக்கடை அடைப்புகளை நீக்க மனிதர்கள்தான் வரவேண்டுமா? அவர்கள் சுய மரியாதையையும், சுகாதார உணர்வையும் துறந்து, உயிரைத் துச்சமாக எண்ணி, மனிதக் கழிவுக்குள் இறங்கித்தான் ஆக வேண்டுமா? சாலைகளில் சாக்கடை நீர் தேங்கி நின்றால் அருவருப்புடன் மூக்கைப் பிடித்துக் கொண்டு நுனிக்கால்களில் நடந்து செல்கிறோமே...? அதைவிடப் பலமடங்கு அசிங்கமான சாக்கடை நீர்க் கால்வாய்க்குள் மூழ்கி எழ ஒரு தொழிலாளிக்கு எவ்வளவு மனவலிமை வேண்டும்! தொழிலாளர்களைச் சாக்கடைக்குள் மூழ்கச் செய்யாமல் இயந்திரங்களைக் கொண்டு சாக்கடை அடைப்புகளை நீக்க முடியாதா?... போன்ற கேள்விகள் மனத்தில் எழுந்தன. சம்பந்தப்பட்ட பலரைச் சந்தித்துப் பிரச்னையை விவாதித்தோம்......

**சென்னை மாநகராட்சியைச் சேர்ந்த நம்பகமான வட்டாரங்களில் சேகரித்த தகவல்கள்:**

“

சென்ற நூற்றாண்டின் இறுதிவரை சென்னை நகரில் திறந்த வடிகால்களே இருந்தன. 1907 இல்தான் மேட்லி என்ற ஆங்கிலேயர், சென்னை நகருக்கான பாதாளச் சாக்கடைத் திட்டத்தைத் தயாரிக்க நியமிக்கப்பட்டார். மேட்லியின் திட்டம் 1961 இல் சென்னை நகரின் மக்கள் தொகை சுமார் ஆறரை லட்சம் இருக்கும் என்ற கணிப்பில் தீட்டப்பட்டது. ஆனால் 1961 இல் சென்னை நகர ஜனத்தொகை எதிர்பார்த்ததைக் காட்டிலும் மூன்று மடங்கு அதிகமாகியிருந்தது. இதற்கேற்ப வடிகால் வசதியை விரிவுபடுத்தி, ஏற்கெனவே போடப்பட்டிருந்த குழாய்களை அகலப்படுத்தியிருக்க வேண்டும். ஆனால் இவ்வாறு செய்யப்படவில்லை.

1978 இல் உலக வங்கியின் உதவியுடன் ஒரு மிகப் பெரிய திட்டம் தீட்டப்பட்டது. இதே ஆண்டில்தான் குடிநீர் வழங்கல் மற்றும் கழிவு நீர் அகற்றல் பொறுப்பு சென்னை மாநகராட்சியிடமிருந்து பிரிக்கப்பட்டு அதற்கெனத் தனி வாரியம் ஏற்படுத்தப்பட்டது. 1978 திட்டப்படி சென்னை நகரின் அறுபது கழிவு நீர் பம்பிங் ஸ்டேஷன்களில் பதினைந்து ஸ்டேஷன்கள் சீரமைக்கப்பட்டன, சில இடங்களில் கழிவுநீரகற்றுக் குழாய்கள் மாற்றப்பட்டன. நகரில் உள்ள இதர நாற்பத்தைந்து பம்பிங் ஸ்டேஷன்களைச் சீரமைக்கவும் சாக்கடைக் குழாய்களை மாற்றவும், ஒரு விரிவான, நுட்பமான திட்டத்தைத் தயாரித்து அளிக்கும்படி உலக வங்கி தமிழக அரசைக் கேட்டுக் கொண்டது. ஆனால் தமிழக அரசு மிகவும் தாமதித்ததால் உலக வங்கி கடன் கொடுப்பதையும் ஒத்திப் போட்டுவிட்டது.



* பக்கெட் மிஷின்

1978 ஆம் ஆண்டின் திட்டத்தின் கீழ் உலக வங்கி உதவியுடன், சாக்கடை அடைப்புக்களை நீக்கச் சில இயந்திரங்கள் வாங்கப்பட்டன: கழிவுநீர்க் குழாய்களிலுள்ள மண், குப்பைகளை அகற்ற இருபது பக்கெட் மிஷின்கள்; கழிவுப் பொருட்கள் கெட்டிப்பட்டுப் போய்ப் பாறையாகிப் போனால் அவற்றை உடைத்து, அடைப்பை நீக்கக் கூடிய இருபது ராடிங் (Rodding) இயந்திரங்கள்; தண்ணீரை வேகமாகப் பீய்ச்சி அடித்துத் தடைகளைப் போக்கக் கூடிய



* மான்ஸ்டர் மிஷின்

இரண்டு ஜெட்டிங் இயந்திரங்கள், என்று திருப்திகரமான பட்டியல் ஒன்று இருக்கிறது. ஆனால் வாங்கிப் பத்து வருடங்கள் கூட ஆகாத இந்த இயந்திரங்களையெல்லாம் ஒதுக்கி வைத்துவிட்டு அடைப்புக்களை நீக்க மனிதர்களே பாதாளச் சாக்கடைக்குள் இறங்க வேண்டியிருக்கிறது! காரணம், இந்த இயந்திரங்களுள் பல, சின்னச் சின்ன ரிப்பேர்களுடன் சரி செய்யப்படாமல் துருப் பிடித்துக் கொண்டிருக்கின்றன. இவை தவிர முப்பத்தாறு லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள 'மான்ஸ்டர் மிஷின்' என்கிற இயந்திரமும் இதே உபயோகத்துக்கென வாங்கப்பட்டு இப்போது பழுதாகிக் கிடக்கிறது!

இயந்திரங்களின் பராமரிப்பில் காட்டப்படும் அதே அலட்சியம்தான் சாக்கடைக் கால்வாய்கள் பராமரிப்பிலும் காட்டப்படுகிறது. முன்பெல்லாம் இரவு நேரங்களில் ஒவ்வொரு நாளும் சாக்கடைக் குழாய்களை நகரின் பல்வேறு பகுதிகளில் முறையாகச் சுத்தப்படுத்தி வந்தார்கள். அதனால் அடிக்கடி அடைப்புகள் ஏற்படாமல் இருந்தன. ஆனால் இப்போதெல்லாம் அடைப்பு ஏற்பட்டால்தான் சுத்தம் செய்வது என்ற நடைமுறை வழக்கத்துக்கு வந்துவிட்டது!

**அ**டைப்பு ஏன் ஏற்படுகிறது? சாக்கடைக் குழாய்களில் ஓடும் தண்ணீரில் சென்னை மாநகரின் சகலவிதமான கழிவுகளும் அடக்கம். பாத்திரம் தேய்த்து அலம்பும் நீர், துணி அலசும் தண்ணீர், சமையலறையிலிருந்து வெளியேறும் தண்ணீர் முதல் மலஜலக் கழிவுநீர் வரை எல்லாமே அதில் வந்து விழுகின்றன. இதைத் தவிர சென்னை நகரிலுள்ள சுமார் மூன்று லட்சம் மாடுகளினாலும் ஏராளமான பிரச்னை ஏற்படுகிறது. இந்த மாடுகளின் சாணத்தை வெயில் காலத்தில் வரட்டி தட்டி விற்று விடுவார்கள். ஆனால் மழைக் காலத்தில் அது கரைந்து ஓடிச் சாக்கடையில்தான் சேர்கிறது. மாட்டுச் சாணத்தில் நிறைய புல்லும் வைக்கோலும் இருக்கும். இதைத் தவிரத் தீவனத்துக்கென்று வைக்கப்பட்டுள்ள புல்லும், வைக்கோலும் சிதறிக் கடைசியில் சாக்கடைக்கு வந்து சேர்கின்றன. சாணமும் வைக்கோலும் சேர்ந்து பாறை போல் இறுகிப் போய்ச் சாக்கடையில் அடைப்பை ஏற்படுத்துகின்றன.

சமீப காலமாகச் சென்னை மாநகரம் செங்குத்தாக வளர்ந்து வருகிறது. ஒரு கிரவுண்ட் நிலத்தில் ஒரு வீடு இருக்கிறது என்ற அடிப்படையில் கட்டப்பட்ட பாதாளச் சாக்கடைகள் அதே ஒரு கிரவுண்டில் உள்ள இருபது முதல் இருபத்தைந்து ஃபிளாட்டுகளின் கழிவுநீரைத் தாங்கிச் செல்ல வேண்டியிருக்கிறது. இதனாலும் அடைப்புகள் ஏற்படுவதற்கான சாத்தியக் கூறுகள் அதிகரிக்கின்றன.

அயல் நாடுகளில் பாதாளச் சாக்கடைகளைப் பராமரிக்க நிறையத் தண்ணீரைச் செலவழிக்கிறார்கள். அதை மீறி அடைப்பு ஏற்பட்டால் பக்கெட் மிஷின், ராடிங் மிஷின் அல்லது ஜெட்டிங் மிஷினைத்தான் பயன்படுத்தி அடைப்புகளை நீக்குகிறார்கள். தப்பித் தவறி ஆட்களைப் பாதாளச் சாக்கடைக்குள் இறங்கச் செய்தால், கட்டாயம் ஆக்ஸிஜன் மாஸ்குகளை (பிராணவாயு முகமூடி) அணிந்து கொண்டே இறங்கச் செய்ய வேண்டும் என்பதில் கண்டிப்பாக இருக்கிறார்கள். இங்கேயும் சாக்கடைத் தொழிலாளர்களுக்கு ஆக்ஸிஜன் மாஸ்கும் டைவிங் உடையும் தர வேண்டும் என்று விதியிருந்தாலும் அது நடைமுறையில் இல்லை. தொழிலாளர்களே அவற்றை உபயோகிக்க முன்வருவதில்லை என்பது ஒரு புறமிருக்க, இவற்றைப் பயன்படுத்தச் சரியான பயிற்சியும் அவர்களுக்கு அளிக்கப்படுவதில்லை!

”

**பாதாளச் சாக்கடையில் விஷவாயு எப்படித் தோன்றுகிறது என்று விளக்கினார் பேராசிரியர் சந்திரசேகரன்:**

“

**சா**க்கடையினுள் ஓடும் கழிவுநீரில் உள்ள 'ஆர்கானிக்' பொருட்கள் ரசாயன மாற்றம் அடைவதால் மீதேன், ஈதேன், கார்பன் டையாக்ஸைட், ஹைட்ரஜன் சல்பைட் போன்ற வாயுக்கள் வெளிப்படுகின்றன. சில சமயங்களில் அமோனியா, கார்பன் மோனாக்ஸைட் போன்றவையும் உருவாகும். இந்த விஷவாயுக்களின் அளவு அதிகரித்துப் பிராண வாயுவின் அளவு குறைவதால் பாதாளச் சாக்கடைக்குள் இறங்கும் தொழிலாளிக்கு மூச்சுத் திணறல் ஏற்படுகிறது. இந்த விஷவாயுக்களுள் மிகக் கொடியவை ஹைட்ரஜன் சல்பைடும்

கார்பன் மோனுக்ஸைடும்தான். காற்று மண்டலத்தில் 0.05 சதவிகிதம் ஹைட்ரஜன் சல்பைடு இருந்தால் கூட அதை அரை மணி நேரம் சுவாசிப்பவருக்கு மயக்கம் ஏற்படும். 0.2 சதவிகிதம் ஹைட்ரஜன் சல்பைடு இருந்தாலோ உயிரே போய்விடும்!

சாக்கடைக்குள் இறங்கும் போது நூறு சதவிகிதப் பாதுகாப்பைத் தரக் கூடியது ஆக்ஸிஜன் மாஸ்க் மட்டுமே.

**"**

சென்னைப் பெருநகர் குடிநீர் மற்றும் கழிவுநீர் அகற்று வாரியத்தில் துப்புரவுப் பணியாளர்கள் சுமார் ஆறாயிரம் பேர் பணி புரிகிறார்கள். ஆனால் இவர்களுள் சுமார் முந்நூறு பேரின் வேலைதான் மூச்சைப் பிடித்துக் கொண்டு கழிவுநீரில் மூழ்கி, அடைப்பை நீக்குவது. இவர்களுக்கு 'divers' (மூழ்கும் பணியாளர்கள்) என்றே பெயர்! இவர்கள் பணிக்குத் தேர்ந்தெடுக்கப்படும் முறையே ஆட்சேபகரமானது. பாதாளச் சாக்கடை வழியே ஓடும் கழிவு நீரை வடிகட்டி, சுமார் இருபதடி ஆழமுள்ள கிணறு போன்ற அமைப்பில் செலுத்துகிறார்கள். விண்ணப்பதாரர் அதிலே மூழ்கி, தரைவரை சென்று ஒரு பிடி மண் எடுத்து வர வேண்டும். அவ்வாறு செய்யக் கூடிய நபரே பணிக்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறார்!

**சாக்கடைக் குழாய்களுள் இறங்கித் துப்புரவு செய்யும் பணியாளர்களின் நிலை என்ன? — கழிவுநீர் அகற்று வாரியத் தொழிலாளர் யூனியன்களுள் ஒன்றான அ. இ. அ. தி. மு. க. சார்பு யூனியன் செயலாளர் கிருஷ்ணன்:**



**"**

பாதாளச் சாக்கடையில் இறங்கும் தொழிலாளியின் வாழ்க்கை ஆபத்து மிக்கது சார்! இறங்குகிறவர் உயிருடன் மேலே வருவாரா அல்லது பிணமாகத்தான் வருவாரா என்று சொல்லவே முடியாது. அதுவும் இறங்குகிற சாக்கடைத் தண்ணீர் எப்படிப் பட்டது? புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். கூட ஒரு தடவை சொன்னார்: "சகிக்க முடியாத கழிவுகள் ஓடும் சாக்கடையில் இறங்கி வேலை செய்கிறான் அந்தத் தொழிலாளி! ஆனால் அவன் மட்டும் அப்படிச் செய்யாவிட்டால் இந்த நகரத்தின் சுகாதாரம் என்ன ஆகும்? இதை நாம் யோசித்துப் பார்க்க வேண்டும்; அவர்களுக்கு என்ன குறையிருந்தாலும் அதைப் பரிவுடன் கேட்டு, உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டும்."

ஆனால் இன்றைக்கு ஒரு தொழிலாளிக்கு என்ன வசதிகள் செய்து தருகிறார்கள்? முன்பு மாதத்துக்கு இரண்டு சோப்புக் கட்டிகள் கொடுத்த இடத்தில் இப்போது நான்கு சோப்புக் கட்டிகள் தருகிறார்கள், எழுநூறு கிராம் எண்ணெய் தருகிறார்கள். சாக்கடையில் மூழ்குவதற்காக முன்பு தரப்பட்டு வந்த பதினைந்து ரூபாய் அலவன்ஸ் இப்போது இருபது ரூபாயாக உயர்த்தப்பட்டு இருக்கிறது. மாதச் சம்பளம், இதர படிகள் எல்லாம் சேர்த்து எழுநூறு அல்லது எண்ணூறு ரூபாய்தான். ஓய்வு பெறும் காலக் கட்டத்தில் ஓர் ஊழியர் அதிகபட்சமாக ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் மாதச் சம்பளம் பெறலாம். ஓய்வு பெற்ற பிறகு கிடைக்கும் பென்ஷன் சுமார் முந்நூறு ரூபாய் இருக்கும்.

இதற்கு மறுபுறமாகச் சாக்கடையில் மூழ்கி எழும் ஒரு தொழிலாளியின் உடல் நலம் எத்தனை பாதிப்புக்கு உள்ளாகிறது தெரியுமா? அவருக்குத் தோல் சம்பந்தமான வியாதிகள் வருவது சகஜம். டி. பி. தாக்குதலுக்கு உள்ளாகும் சாத்தியக்கூறுகளும் அதிகம்.

பணிக்காலத்திலோ, சாக்கடைக்குள் இறங்கும் போதோ இறக்கும் தொழிலாளியின் குடும்பத்துக்கு இருபதாயிரம் ரூபாய் தரப்படுகிறது. அவரது வாரிசுக்குக் கருணை அடிப்படையில் வேலை தரவும் வகை செய்யப் பட்டுள்ளது. (அதே துப்புரவுத் தொழிலாளர் வேலைதான்!)

சில வருஷங்களுக்கு முன்னால், சாக்கடையில் மூழ்கி இறந்த ஒரு தொழிலாளியை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போய்விட்டு, உடம்பு சரியில்லாமல் செத்துப் போய் விட்டதாகச் சொல்லி விஷயத்தை மூடி மறைத்து விட்டார்கள்.

சாக்கடை அடைப்பை நீக்க நிறைய மிஷின்கள் வாங்கியிருக்கிறார்கள். ஆனால், அவற்றில் பாதிக்கு மேல் ரிப்பேர். ரிப்பேரானவற்றைச் சரி செய்ய முயற்சிகள் மேற்கொள்ளாதது ஏன்? மிஷின்களை வாங்கிவிட்டாலும் மேன்மேலும் புதிய 'டைவர்' களைப் பணிக்கு எடுத்துக் கொண்டுதானே இருக்கிறார்கள். இதிலிருந்தே தெரிகிறது, இந்தக் காரியத்துக்கு மிஷினையே முழுக்க முழுக்க

நம்பிப் பயனில்லை என்று.

”

**அலமேலு — துப்புரவுப் பணியாளர்:**



“

மூன்று வருடங்களுக்கு முன்னால் என் கணவர் பாதாளச் சாக்கடைக்குள்ள இறங்கினப்ப இறந்து போனார். அரசாங்கம் அனுதாப அடிப்படையிலே எனக்கு வேலை போட்டுக் கொடுத்தது. இப்போது தி. நகர் பகுதிக் குடிநீர், வடிகால் வாரிய அலுவலகத்தில் பணிபுரிகிறேன். ஒரு மகன், மூன்று பெண்கள், நான் என்று ஐந்து பேர் அடங்கிய எங்கள் குடும்பம் என்னுடைய அறுநூறு ரூபாய்ச் சம்பளத்துலத்தான் ஓடிக்கிட்டிருக்கு.

”

'கழிவுநீர்க் குழாய்க்குள் இறங்கி விஷ வாயுவால் மூச்சு முட்டிப் பணியாளர்கள்



இறந்து போவது, எப்போதோ ஒரு முறை நிகழும் விபத்து அல்ல. வருடந்தோறும், மூன்று, நான்கு தொழிலாளிகள் பாதாளச் சாக்கடைக்குப் பலியாகிறார்கள். இந்த நிலையை மாற்ற வாரியம் என்ன செய்யப் போகிறது? பணியாளர்களுக்கு ஓர் ஆயுள் காப்பீட்டுத் திட்டத்தை உருவாக்கித் தரக் கூடாதா?

”

**வாரியத் தலைவர் ஜேப்பியார்:**



“

பாதாளச் சாக்கடை மரணங்கள் மிகவும் வருத்தத்துக்குரிய விஷயம்தான். இதில் பெரும் பிரச்னையாக இருப்பவை பெருநகருக்குள் இருக்கிற மாடுகள். பம்பாய், தில்லி போன்ற நகரங்களில் மாடுகளை நகர எல்லைக்குள் வைத்துக் கொள்வதைத் தடை செய்துள்ளார்கள். சென்னையிலுள்ள மாடுகளை எப்படி அகற்றுவது என்றுதான் யோசித்து வருகிறோம். ஒரு மாட்டின் கழிவு பத்து மனிதர்களுடைய கழிவுக்குச் சமானம்! எனவே மாடுகளை அகற்றினால் முக்கால்வாசிப் பிரச்னை தீர்ந்துவிடும். இன்னும் ஓராண்டுக்குள் அதைச் செயல்படுத்தி விடுவோம்.

பாதாளச் சாக்கடை அடைப்புகளை நீக்க வாங்கப்பட்டுள்ள மான்ஸ்டர் மிஷினைப் பெரிய அகலமான சாலைகளில் மட்டுமே உபயோகிக்க முடியும். அதுவும் இப்போது பழசாகிவிட்டது. இந்தியாவிலேயே செய்யப்பட்டுள்ள சிறிய மிஷின்களை விரைவில் வாங்கத் திட்டமிட்டுள்ளோம். இன்னும் நான்கைந்து மாதங்களில் அவை வந்துவிடும். ஆனால் மிஷின்கள் தமது வேலை வாய்ப்புக்களைப் பாதித்துவிடும் என்று தொழிலாளர்கள் அஞ்சுகிறார்கள்.

சென்னையில் மட்டும் அல்ல. இந்தியாவின் எல்லாப் பெருநகர்களிலும் பாதாளச் சாக்கடைக்குள் இறங்கி அடைப்புகள் நீக்கும் பணியாளர்கள் இருக்கிறார்கள்.

ஆக்ஸிஜன் மாஸ்குகளை வழங்கும் திட்டமும் பரிசீலனையில் இருக்கிறது. இன்னும் மூன்று மாதங்களில் அவை வழங்கப் பட்டுவிடும். நீங்கள் பரிந்துரை செய்துள்ள ஆயுள் காப்பீட்டுத் திட்டத்தையும் மேற்கொண்டு, தொழிலாளர்களின் ப்ரீமியம் முழுவதையும் வாரியமே கட்டுவதற்கு ஏற்பாடு செய்கிறோம்.

”



"ஏன் அந்தப் பேச்சாளரையே பேசக் கூப்பிடணும்னு சொல்றீங்க..?"

"அவரைக் கூப்பிட்டா நமக்குச் செலவு இல்லே, அவருக்குத் தேவையான சோடா, மாலை, பொன்னாடை எல்லாத்தையும் அவரே கொண்டு வந்துடுவாரு."

— சேத்தூர் அன்பழகன்.

சென்னை மாநகரத்திலிருந்து வெளியேறும் கழிவுநீர், நகரின் பல்வேறு இடங்களிலும் உள்ள அறுபதுக்கும் மேற்பட்ட பம்பிங் ஸ்டேஷன்களுக்கு எடுத்துச் செல்லப்பட்டு, அதில் உள்ள அசுத்தங்கள் பிரித்து எடுக்கப்பட்டு, ஒரு மையக் கால்வாய்க்கு அனுப்பப்படுகின்றது. இந்தக் கால்வாய்த் தண்ணீர் கொடுங்கையூர், கோயம்பேடு, நேசப்பாக்கம் பள்ளிக்கரணை என்ற நான்கு நகர் எல்லை இடங்களுக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. இந்த இடங்களில் புல் வளர்ப்பதற்கு இத் தண்ணீர் பயன்படுத்தப்படுகிறது. புல்லை விற்று வாரியம் பணம் சம்பாதிக்கிறது. இந்த உபரி வருமானத்தையே ஊக்கத் தொகையாக அளித்து, இவ்வாரியம், சாக்கடை அடைப்புகளை நீக்கக் கூடிய ஒரு சிறந்த இயந்திரத்தை — இந்திய சூழல்களுக்கு ஏற்ற இயந்திரத்தை — உருவாக்க இளம் பொறியாளர்களையும் தொழில் நுட்ப வல்லுனர்களையும் ஊக்குவிக்கலாம். வாரிய அலுவலகத்தின் ஏ. ஸி. அறைக்குள் கம்ப்யூட்டர் ஒன்று இயங்கி வருகிறது. ஆனால் கம்ப்யூட்டர் யுகத்தின் பயன் கடைநிலை ஊழியரையும் சென்று அடைய வேண்டும். ஊழியர்களைச் சாக்கடைக்குள் இறங்கச் செய்யும் மனிதாபிமானமற்ற செயலுக்கு முடிவு கட்ட வேண்டும்.

— **எஸ். சந்திரமௌலி, ப்ரியன்**

மேலட்டை வண்ணப்படம்:
**கே. வி. ஆனந்த்**

புகைப்படங்கள்:
**சோமு, கே. வி. ஆனந்த்.**

## ஒரு நிமிடம்

# நான் இறக்குமதி அல்ல!



## வட்டமேஜை

கல்கி 18.10.87 இதழில் தீபாவளி ரிலீஸ் திரைப் படங்கள் என்ற தலைப்பின் கீழ், 'இறக்குமதி ஹீ ரோ யின்' என்ற குறிப்புடன், நாயகன் படத்தில் நடித்துள்ள நான் பம்பாயிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இது தவறு. நான் தமிழ்நாட்டில், சென்னையில் பிறந்து, வளர்ந்தவள்.

— சரண்யா, சென்னை 24.

இதுவரை ஊனம் என்பதை ஒரு குறையாகக் கருதி வந்த எங்களுக்குள்ளும் ஊனம் இருப்பதை ''முள்ளிலும் மலர் தேடி'' கதையாசிரியர் மலர்வண்ணன், அழகாகத் தெளிவுபடுத்திவிட்டார்.

— ஜி.கே. ராஜு, திருக்கடையூர்.

இலங்கைப் பிரச்னை நிலவுகிற இந்த நேரத்தில், அதை மையமாக வைத்து உருவான 'போர்க்காலக் குருவிகள்' கதை அருமை! மாறன், டிசைரி போன்றவர்கள் இன்னும் உள்ளனர் என்பதை மிக நேர்த்தியாகச் சொல்லியிருந்தார், குடந்தை சண்முகம்!

— எஸ். ராஜா, குத்தாலம்.

வ.உ.சி. மாவட்டக் கலெக்டர், பேட்டியின் போது பொறுமையாகவும், பொறுப்புணர்ச்சியுடனும் பதில் அளித்துள்ளார். அவரும் மற்றும் ஏனைய மாவட்ட அதிகாரிகளும் புதியதாக ஏற்பட்டுள்ள வ.உ.சி. மாவட்டத்தை முன்னேற்றப் பாடுபடுவார்கள் என நம்புகிறேன்.

— ஏ.ஜி.கே. சுந்தர், கோயமுத்தூர் 6.

ஆற்காடு முதலியார் சகோதரர்கள் பற்றிய சிறப்புக் குறிப்புக்களை வெளியிட்டு, உரிய நேரத்தில் ''கல்கி'' தன் நினைவாஞ்சலியை அவர்களுக்குத் தெரிவித்திருக்கிறது.

— த.கோவிந்தராசன், மடவாளம்.

''தடைப்பட்டுக் கிடக்கும் தமிழக முன்னேற்றம்'' கட்டுரையில் தூத்துக்குடி துறைமுகத்தை அழப்படுத்துவதும், சேது சமுத்திரத் திட்டம் நிறைவேற்றப்பட வேண்டியதும் எவ்வளவு முக்கியமானவை என்பதைப் பல்லாயிரக்கணக்கான வாசகர்களுக்கு எடுத்துரைத்த கல்கிக்குப் பாராட்டுக்கள். அக்கட்டுரை மிகவும் பயனுள்ளதாக அமைந்திருந்தது.

— மு. செந்தில்வாசன், திருமருகல்.

நூற்றுண்டுச் சாலைகள் சிறுகதை என் மனத்தை வெகுவாகப் பாதித்து விட்டது. மருதுவின் வித்தியாசமான ஓவியம் கதைக்குப் பொருத்தமாக இருந்தது. அந்தப் பெண்ணின் மறைவுக்கு டாக்டரின் (தேவையற்ற) பிடிவாத குணமே காரணம் என்பதை மருது தனது ஓவியத்தில் வெளிப்படுத்தியிருந்த விதம், ஒரு டைரக்டரின் 'டச்'சைப் போன்று இருந்தது.

— க. இளங்கோ, நத்தியநல்லூர்.

'அமைதிக்காகப் பல வீர மரணங்கள்' கட்டுரை படித்த போது கண்ணீர் பெருகியது. இறந்தும் வாழ்ந்து நிற்கும், இந்திய வீரர்களுக்கு நமது அஞ்சலி, அவர்களது குடும்பங்களின் தவிப்பை மாற்றி விடுமா? என்று மனம் கேட்டுக் கொண்டிருக்கிறது.

— வி. சுதாஜகன், நாகப்பட்டினம்.

திரைப்பட விமரிசனங்களில் ஜெயமன்மதனின் பாணி பளிச்சிடுவதுடன், தனித் தன்மையுடன் விளங்குகிறது! அல்லி பதில்கள் அடைடா, அந்த அல்லியே ரசித்துப் பாராட்டும்படி உள்ளது!

— ஆர்.வி. இரஞ்சன், சென்னை. 15.

தலையங்கம் படித்தேன்! மிகத் தவறான மதிப்பீட்டின் அடிப்படையில், இலங்கை அரசின், ராஜதந்திர அணுகுமுறைகளுக்குப் பலியாகி, விடுதலைப் புலிகளின் மீது இந்திய அமைதிப்படை மேற்கொண்ட போர் நடவடிக்கை, இந்தியாவின் நடுநிலைக் கொள்கைகளைக் குழிதோண்டிப் புதைத்து விட்டது என்பதுடன், மீளமுடியாத சிக்கல் வலையில், ராஜீவைச் சிக்க வைத்து விட்டது என்பதையும், ஒப்புக் கொள்ள மனமின்றி, விடுதலைப் புலிகளின் தன்மானப் போராட்டத்தைக் குறைகூறியிருப்பது வேதனையூட்டுகிறது.

— எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

இந்திய — இலங்கை ஒப்பந்தத்திலும் குறை இருக்கிறது. அதில் நமக்குத் திருப்தி இல்லை என்பதையும், விடுதலைப் புலிகள் Vs இந்திய ராணுவம் சண்டையில் விடுதலைப் புலிகள் மீதுள்ள தவறையும் சுட்டிக் காட்டும் தங்களின் ''தராக''த் தனமான தலையங்கம் வரவேற்கத் தகுந்ததே!

— சி. துரைராஜ், சூலை.

ஆற்காடு சகோதரர்கள் பற்றிய எனது பேட்டிக் கட்டுரையில் மூன்றாவது பாராவில் ''அந்தக் காலத்து எஃப்.ஏ. படிப்பு'' என்று இருக்க வேண்டும். அது, இன்டர்மீடியட் அல்லது பி.யூ.சி. மாதிரி, எஃப்.ஏ. என்பதற்குப் பதில் எம்.ஏ. என்று தவறுதலாக அச்சாகியுள்ளது.

— சுப்ரபாலன், சென்னை.




மொதல்ல இதைப் படிச்சுட்டு அப்புறம் மத்ததை எல்லாம் பார்க்கலாம்!
கோப்புகள்
ராஜீவ் புராணம்


இருக்க இருக்க.. நீடக்க நீடிக்க வந்து கொண்டே இருக்கும்.. ஜவ்வு மிட்டாய்!


அருமையான அல்சேஷன் நாய், பாருங்க!


மொந்து போகாதீங்க! அது நாய் இல்லை!... நரி!
அமிர்தலிங்கம்



# கல்கி

1987 நவம்பர் 15
மலர் 46 இதழ் 16
பிரபவ ஐப்பசி 29



## ராஜீவ் காந்தி ஏமாந்து போவாரா?

விடுதலைப்புலிகளுக்கு எதிராக அமைதிப் படையினர் எடுக்கும் நடவடிக்கைகளை, ஏதோ ஈழத் தமிழர் இனத்தையே பூண்டோடு அழிக்க அவர்கள் திட்டமிட்டுச் செயல்படுவது போலத் திரித்துப் பேசுகிற பல தலைவர்கள், தமிழகத்தில் தமிழர்களிடையே ஒரு கொந்தளிப்பை உருவாக்க முயன்று கொண்டிருக்கும் நிலையிலும் பிரதமர் உறுதி தளராமல் பேசியிருப்பது பாராட்டுக்குரியது. ''போர் நிறுத்தம் என்பது விடுதலைப்புலிகள் கையில்தான் இருக்கிறது; ஆயுதங்களை முழுமையாக ஒப்படைத்துவிட்டு, இந்தியா — இலங்கை ஒப்பந்தத்தை மதிப்பதாகவும் அவர்கள் ஒப்புக் கொள்ளும் வரை போர் நிறுத்தம் என்ற பேச்சுக்கே இடமில்லை' என்று உறுதியாகக் கூறியுள்ள பிரதமர், அரசியல் நிர்ப்பந்தங்களுக்காக இந்த நிலையிலிருந்து பின்வாங்கிவிடக் கூடாது.

''ராஜீவ் ஒப்பந்தம் செய்து கொண்ட விதம் சரியில்லை என்று கூறும் கல்கி, அந்த ஒப்பந்தத்தின் அடிப்படையில் இப்போது அமைதிப் படை எடுத்துள்ள நடவடிக்கையை மட்டும் எப்படி ஆதரிக்கலாம்? இது முரண்பாடல்லவா?'' என்று சிலர் கேட்கிறார்கள். எந்த அரசியல் பிரச்னையிலும் லட்சிய நோக்கும் யதார்த்தப் பார்வையும் பின்னிப் பிணைந்துதான் வரும், வரவேண்டும். ஒப்பந்தம் இன்னும் சரியான விதத்தில் நேரடியாகச் சம்பந்தப்பட்டவர்களிடையே உருவாகியிருக்கலாம் என்று நாம் எண்ணுவது லட்சிய நோக்கு. அந்த லட்சியம் நிறைவேறியிருந்தால் நமது அமைதிப் படையினர் விடுதலைப் புலிகளுடன் மோத வேண்டிய அவசியமே இல்லாமல் கூடப் போயிருக்கலாம். ஆனால் ஒப்பந்தம் கையெழுத்தாகிவிட்டது என்பது யதார்த்த நிலை. அந்த ஒப்பந்தம் ஏதோ ராஜீவுக்கும் ஜெயவர்த்தனவுக்கும் இடையில் ஏற்பட்டதல்ல; இந்தியாவுக்கும் இலங்கைக்கும் இடையே உண்டானது. அதனை மதிக்கவும் அதன்படி நடக்கவும் இரு தேசங்களுமே கடமைப்பட்டுப் போயிருக்கின்றன. பின்வாங்குவது இனிச் சாத்தியமில்லை. இந்த ஒப்பந்தத்துக்கு ஆதரவு தருவதாகவும், இந்திய ராணுவத்தை எதிர்க்க மனமில்லை என்றும், ஜனநாயகம் மலரவும் அமைதி நிலவவும் ஒத்துழைப்பதாகவும் ஆரம்பத்தில் வாக்களித்த விடுதலைப் புலிகள், வஞ்சகமாக நடந்து கொண்டு, அமைதி காக்கும் படை தங்களைத் தாக்க வேண்டிய நிர்ப்பந்தத்தை ஏற்படுத்தி விட்டனர் என்பதும் யதார்த்தம். இலங்கையில் வாழும் சாமானியத் தமிழரானாலும் சரி, சிங்களவரானாலும் சரி, போர் ஓய்ந்து அமைதி திரும்பினால் போதும் என்றே ஏக்கத்துடன் எதிர்பார்க்கிறார்கள். இதுவும் யதார்த்த உண்மை. அவர்களுடைய இந்த ஆசை நிறைவேறவும், அதே சமயம் ஈழத் தமிழர்கள் கௌரவமாக சம அந்தஸ்துடன் வாழவுமே அமைதிப் படையினர் உயிரைக் கொடுத்துப் போராடி வருகின்றனர். இந்தச் சூழ்நிலையில் நமது ராணுவத்தை நாம் விட்டுக் கொடுக்கவா முடியும்? அது தேசத் துரோகத்தை விடவும் கேவலமானது.

லட்சிய நோக்கில் பார்த்தால் ஆரம்ப காலத்தில் பிரதமர் இந்திரா காந்தியும் தமிழக அரசும் விடுதலைப் புலிகளை இந்திய மண்ணில் காலூன்றிக் கொள்ள அனுமதித்ததே குற்றம்தான். புலிகளின் போராட்ட முறைகளையும் சுதந்திர ஈழ நாடு கோரிக்கையையும் ஏற்காத போது அவர்களுக்குப் புகலிடம் அளித்துப் பயிற்சி பெற அனுமதித்திருப்பானேன்? இப்படிப் பல தவறுகள் இங்கும் இலங்கையிலும் நடந்திருக்கின்றன. இவற்றையெல்லாம் இன்று கிண்டிக் கிளறிப் பார்த்துக் கொண்டிருப்பதில் எவ்விதப் பிரயோஜனமுமில்லை. இன்று நடக்க வேண்டியது என்ன? அதைக் கவனிப்போம்.

தடை செய்யப்பட்ட ஜே. வி. பி. (சிங்கள பயங்கரவாத இயக்கம்) மீண்டும் தலையெடுக்க ஆரம்பித்திருக்கிறது. இது ஆபத்தான அறிகுறி. இரண்டாவதாக, இந்தியா — இலங்கை ஒப்பந்தத்தின் அடிப்படையில் உரிமைகளை ஈழத் தமிழர்களுக்கு வழங்க, இலங்கை நாடாளுமன்றத்தில் ஜயவர்த்தன தாக்கல் செய்துள்ள மசோதாக்கள் டி. யூ. எல். எஃப். தலைவர்களுக்குத் திருப்தி அளிக்கவில்லை. இது மிகவும் கவலையளிக்கும் விஷயம்.

பாரதப் பிரதமர் விடுதலைப் புலிகள் விஷயத்தில் கண்டிப்புக் காட்டுவது போலவே, ஜெயவர்த்தனவிடமும் கண்டிப்புக் காட்டி, அவர் ஜே. வி. பி. யின் வாலை ஒட்ட நறுக்குமாறு செய்ய வேண்டும். ஈழத் தமிழன் தன்மானத்துடன் வாழ ஒப்பந்தத்தில் உறுதி அளிக்கப்பட்ட உரிமைகள், மாற்றுக் குறையாமல் அவனுக்குக் கிடைக்க, நமது பிரதமர் ஜெயவர்த்தனவுடன் போராட வேண்டும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

வம்பு மார்க்கெட்:

# ஜெயலலிதாவுக்கு என்ன கோபம்?





தவம் கலைகிறது!

எம். ஜி. ஆர். அமெரிக்காவிலிருந்து திரும்பிய போது விமான நிலையத்தில் தலைரே திரண்டு வரவேற்பு கொடுத்தது. ஆனால் ஜெயலலிதா மாத்திரம் வரவில்லை. ஒருவேளை, மற்ற சாதாரணத் தொண்டர்களோடு தாமும் ஒருவராகப் போய் நிற்க வேண்டுமா என்று நினைத்திருக்கலாம். அல்லது முதன் முதலாக எம். ஜி. ஆர். சிகிச்சை பெற்றுத் திரும்பிய போது பட்ட அனுபவத்தினால் ஏற்பட்ட கசப்பாக இருக்கலாம்.

விமான நிலையத்திற்கு மட்டுமல்ல; அ. தி. மு. க. அலுவலகத்திற்கும் கூடச் சென்று, எம். ஜி. ஆரை அவர் சந்திக்கவில்லை. ஆம்; முதன் முதலாக திங்கள் அன்று எம். ஜி. ஆர்., அ. தி. மு. க. அலுவலகத்துக்குச் சென்ற போது, ஜெயலலிதா வரவில்லை. எம். ஜி. ஆர். அமெரிக்காவிலிருந்த போது, தினந்தோறும் வந்து கொண்டிருந்தார்!

ஏன் இந்தக் கோபம்? ஆர். எம். வீ. யின் அமைச்சர் நியமனத்தோடு, இவருக்கும் ஒரு 'கௌரவம்' அறிவிக்கப்படுவதாக இருந்ததாம். அது அளிக்கப்படவில்லை என்றுதான் கோபமாம்! ஆனால் செல்வி அதற்காகக் கோபப்பட வேண்டியதில்லை என்றே தெரிகிறது. வீரப்பனை முதலில் கவனித்து, ஜெயலலிதாவுக்கு இப்போது 'லைனைக் கிளியர்' செய்து வைத்திருக்கிறார் எம். ஜி. ஆர்!

## அரங்கநாயகத்தின் ஆவல்

பதினொரு பேர் கூட்டத்தோடு வெளியேறிய ஆர். எம். வீ. யின் தற்போதைய தனி நியமனத்தால் ஏமாற்றத்துக்குள்ளாகியிருக்கும் இன்னொருவர், அரங்கநாயகம். வீரப்பனோடு அவரும் உள்ளே இழுக்கப்படுவார் என்று பெரும் எதிர்பார்ப்பு இருந்தது.

அதனாலேயே எம். ஜி. ஆரிடம் வேறு எந்த உதவியும் கோராமல் பல்லைக் கடித்துக் கொண்டு காத்திருந்தாராம் அரங்கநாயகம். இப்போது மட்டுமென்ன, 'பொறுத்தார் பூமி ஆள்வார் என்ற பழமொழி பொய்த்துப் போய் விடுமா என்ன' என்றுதான் முணுமுணுத்தபடி இருப்பார்.

## மூப்பனாரின் தவம் கலைகிறது!

'தமிழக அரசியல் பக்கம் இப்போது திரும்ப மாட்டேன்; தில்லியில் நாற்காலி அரசியல் நடத்திக் கொண்டிருப்பதே போதும்' — என்று வைராக்கியத்துடனிருந்த ஜி. கே. மூப்பனாரின் சமீபத்திய அசைவுகள் வித்தியாசமாக இருக்கின்றன.

அவர் தமிழக அரசியலில் சுறுசுறுப்பாக ஈடுபட்டு இயங்கப் போகிறாராம். இன்னும் இரண்டு ஆண்டுகளில் தேர்தல் வரப் போகிறது என்பதாலா? (அடுத்த முறை அ. தி. மு. க. வுடன் கூட்டு இல்லை என்று பொதுவாக முடிவு எடுத்தாயிற்று!)

ஒருவர் கூறிய காரணம் வேடிக்கையாக இருந்தது: "ப. சிதம்பரம் தமிழகத்தில் அதிக செல்வாக்குப் பெற்று வருகிறார். அதைத் தடுக்கவே மூப்பனார் வருகிறார்!" என்றார் அவர்! தமாஷாக இல்லை?

## இன்னொரு 'நியூஸ்' கேந்திரம்!

சென்னை டீ. வி. நிலையம் செய்திகளை ஒளிபரப்புவதுடன் நிறையச் செய்திகளை உருவாக்கிக் கொண்டுமிருக்கிறது.

இந்திரா காந்தியின் மறைவு நாள். அன்று டீ. வி. நிலைய வாசலில் ஐ. என். டி. யூ. சி. சார்பில் நடந்த விழாவில் பேசுவதற்கு வந்தார் 'எம். பி.' யான ஜெயந்தி நடராஜன்.

பொதுவாக எந்த நிறுவனத்துக்கும் வி. ஐ. பி. வந்தால், நிலையப் பொறுப்பாளர்களும் அங்கே தென்படுவார்கள். ஆனால் அந்த விழாவில் நிலைய அதிகாரிகள் எவரையும் காணோம். ஜெயந்தி வந்தார், வாசற்புறத்திலிருந்தே பேசினார்; போய் விட்டார்!

ஏன் அப்படி? இத்தனைக்கும் அதே டீ. வி. நிலையத்தில் அறிவிப்பாளராக இருந்தவர் தான் ஜெயந்தி நடராஜன்! பழைய நண்பர்களைப் பற்றி அவர் விசாரிக்கக் கூட இல்லை! அவர்களும் இவரைக் கண்டு கொள்ளவில்லை!

— ஒட்டக்கூத்தன் ஜி



பொறுத்தார்......



வந்தார், போனார்

# நிற்க நிழல் வேண்டும்

## 16

நல்ல இருட்டானதால் அவன் முகத்தில் தென்பட்ட திகைப்பை அவள் கவனித்திருக்க முடியாது.

"ஓ, பேசலாமே!" என்று மெல்லிய குரலில் சொல்லி ஜயசீலன் கூச்சத்துடன் சற்று நகர்ந்து உட்கார்ந்து கொண்டான்.

எதிர்த்த வரிசையிலும் அடுத்தாற்போலிருந்த வீடுகளிலும் வெளித்திண்ணையில் சிலர் படுத்திருந்த நிழற் படிவம் தெரிந்தது.

"இந்த நேரத்தில் நாம கதைச்சுக் கொண்டு இருந்தா மற்றவங்களுக்குத் தொந்தரவா இருக்காதா?"

"ஒண்டும் தொந்தரவு இல்லை. இடி இடிச்சாலும் காதிலே விழாத கட்டைகளாக் கிடப்பான்கள் எல்லாரும். முகாமிலே வாழத் தொடங்கிய பிறகு சுரணை யெங்கே மீதமிருக்கு?"

அவள் குரலில் மிதமிஞ்சிய அலுப்பு தெரிந்தது.

"அவங்களைப் பற்றின கவலை உமக்கு வேண்டாம். உமக்குத் தொந்தரவு இல்லே தானே?" என்று அவள் கேட்டபோது, குரல் மாறியிருந்தது. அதில் உல்லாச இழை புகுந்திருந்தது.

"இல்லே."

"அப்ப சரி" என்று அவள் சுவர் பக்கமாய்ச் சாய்ந்து முழங்கால்களைக் கட்டியபடி உட்கார்ந்தாள்.

"நான் தூங்கி இரண்டு வருஷங்கள் ஆச்சு சீலன்" என்றாள், இரகசியமாகப் பேசுவது போல.

"இங்கே வந்து அவ்வளவு நாட்கள் ஆச்சா?"

"இல்லே ஒரு வருஷம் ஆச்சு. அதுக்கு ஒரு வருஷம் முந்தி மஹேச்வரன் சொல்லாமல் கொள்ளாமல் கிளம்பிப் போனார்."

"ஜெர்மனிக்குப் போயிருக்கார் எண்டு கதைக்க இல்லே?"

"ஓமய்யா. அப்படியெண்டு கேள்வி. ஒரு தகவலும் இல்லையே!"

"சொல்லாமல் கொள்ளாமல் ஏன் போகணும்?"

"யார் கண்டது?" என்றாள் அவள் துயரத்துடன். "அவருக்குப் பொதுவாகத் தைரியம் போதாது!"

"ஆ, அது பொய் வார்த்தை!" என்றான் அவன் சமாதானமாக. தன் குடும்பத்தை எதிர்த்து ஜாதி விட்டு ஜாதி போய் உங்களைத் திருமணம் செய்து கொண்டது தைரியமான காரியம் இல்லையா?"

"அது சரி!" என்று அவள் சிரித்தாள். 'அதோடு அவருடைய தைரியம் போச்சு. அதுக்கு நான் காரணம் எண்டு நினைக்காதீர். கலவரங்களைக் கண்டு ரொம்பக் கலங்கிப் போனார். எப்பவும் யார் மேலே யாவது கோபம் வரும். அரசாங்கத்தோட எதேச்சாதிகாரப் போக்கைக் கண்டு கோபம். ஐக்கிய விடுதலை முன்னணித் தலைவர்கள் மேலக் கோபம்."

"போராளிகள் மேலே?"

"கோபமில்லே. உண்மையிலே அவங்களுக்காக வருத்தப்படுவார்."

"அவரும் ஒரு போராளியோ?"

"இல்லே. இல்லே. எந்த இயக்கத்திலேயும் அவர் சேர இல்லை. 'எனக்குத் தெரியும் இந்தப் போராளிக் கும்பலை உருவாக்கினதும் பயங்கரவாதத்தைப் புகுத்தினதும் இந்த அரசியல் தலைவர்கள்தான் எண்டு அவர் கதைப்பார்."

"மஹேச்வரன் சொன்னதிலே நிறைய உண்மை இருக்கு புனிதா" என்றான் அவன் சோர்வுடன். "ஆயுதம் ஏந்த ஆரம்பிச்சதும் அடியாட்கள், படியா ஆட்களாக மாறிடும் காலம் வரும் எண்டு அரசியல்வாதிகள் யோசிக்க இல்லே. அவர்கள் தலையே குறி வைக்கப்படும் எண்டு நினைக்க இல்லே."

"மஹேச்வரன் இதைத்தான் சொல்வார். அவர் உபாத்தியாயர் இல்லையா? இந்தப் போக்கு நல்லதுக்கில்லே என்பார்.

"இந்த எண்ணங்களை அவர் வெளிப்படையாச் சொன்னதுண்டா?"

"உண்டுதான்."

"அவர் தலைமறைவாப் போனதுக்கும் அதற்கும் சம்பந்தமிருக்கலாம்."

"இருக்கலாம். ஆனா அவர் தலைமறைவாப் போறதுக்கு முந்தி ஒரு சம்பவம் நடந்தது. அதிலே ரொம்பக் கலங்கிப் போனார்.

"அவர் வேலை பார்த்த பள்ளிக் கட்டிடத்திலே ராணுவப் படை வந்து உட்கார்ந்தது—பள்ளிக்கு விடுமுறை என்கிற சாக்கிலே. முழுப் பரீட்சை முடிஞ்ச சமயம். ஓர் உபாத்தியாயருக்கு ஒரு முக்கியமான ஃபைல் ஒண்டு தேவைப்பட்டது. யாரும் பள்ளிக்கு வரக் கூடாது எண்டு ராணுவ உத்தரவு. அவர் காரணத்தை விளக்கி, தமக்கு அந்த ஃபைல் மட்டும்தான் வேணும் எண்டு ஒரு விண்ணப்பம் எழுதி அனுப்பினார். 'சரிதான், நாளை இந்த நேரத்துக்கு நிராயுதபாணியென்கிற அடையாளமாய்க் கையைத் தூக்கிக் கொண்டு வெள்ளைக் கொடி ஏந்தி வரணும். வேண்டிய ஃபைல் கிடைக்கும்' என்று சேதி

வாஸந்தி



வந்தது. இந்த ஆள் பாவம், வெள்ளைக் கொடி தூக்கியபடி பள்ளியை நோக்கிக் குறிப்பிட்ட சமயத்துக்குப் போனார். மஹேசச்வரனும் கூடப் போய்த் தொலைவிலே நின்டார். பள்ளி வாசலுக்கு நூறடியில் உபாத்தியாயர் போய் நிற்கையிலே உள்ளிருந்து ராணுவக்காரன் சுட்டு வீழ்த்திட்டான். அந்த அதிர்ச்சியிலே மஹேசச்வரன் பிறகு பேசவேயில்லை. ஒரு கிழமை கழிச்சு ஆளைக் காணோம்.''

அவள் ஏதோ கதை சொல்வது போல் பேசிக் கொண்டு போனாள். அவனுக்குத் தான் மேனி நடுங்கிற்று. கட்டிய முழங்கால்களுக்குள் முகத்தைப் புதைத்துக் கொண்டான். பிறகு மெள்ளத் தன்னைச் சுதாரித்துக் கொண்டு கேட்டான்:

''அவர் ஜெர்மனிக்குப் போனதா எப்படிச் சொல்கிறீர்?''

''யாருக்கோ அப்படித் தகவல் வந்ததாச் சொன்னாங்க.''

''அவருடைய அப்பா அம்மா வீட்டுக்கு ஏதாவது தகவல் வந்திருக்காதா?''

''நான் விசாரிக்கல்லே. கலப்புத் திருமணமானதாலே அவங்களுக்கு இன்னமும் என் மேலக் கோபம். என்னை வீட்டிலே சேர்க்கிறதில்லே!''

''இப்படிப்பட்ட கலவர நிலவரத்திலேயுமா? இப்ப வித்தியாசமெல்லாம் குறைஞ்

சிருக்கும்னு நினைச்சேன்.''

''எங்கே சிலன் குறைஞ்சிருக்கு? நம்ம ஜனங்களென்னிக்காவதுஜாதிவித்தியாசத்தை மறப்பாங்களா?''

அவனுக்கு ஏதும் சொல்லத் தெரிய வில்லை. சிலியாவுடன் அவன் நெருக்க மாகப் பழகுவது இந்த ஜாதிப் பிரச்னையினால் தான் அம்மாவுக்குப் பிடிக்கவில்லை என்று அவனுக்குத் தெரியும். ஆனால் அம்மா இன்றைக்கு உயிருடன் இருந்தால் மனம் மாறியிருக்க மாட்டாளா? இந்த வேறுபாடெல்லாம் முக்கியமில்லை என்னும்படியாக எத்தனையோ விஷயங்கள் ஈழச்சரித்திரத்தில் நடந்துவிட்டன!

''உமக்கு விஷயம் தெரியுமா, சிலன்? யாழ்ப்பாணத்துப் பக்க கிராமத்திலே விமானத் தாக்குதல் தீவிரமா நடக்கும் போது சிவன் கோவில்லே எல்லாரும் தஞ்சம் எடுக்கணும்னு அறிக்கை விட்டாங்களாம். ஜனங்க அரக்கப் பரக்கக் கோவிலே நோக்கிப் போனா தர்மகர்த்தா கோவிலேப் பூட்டிவிட்டுத் தலே மறைவாயிட்டார். கோவில் திறந்திருந்தா கண்ட ஜனமும் உள்ளே நுழைஞ்சிடும்னு.''

அவன் தலையைக் குனிந்து கொண்டான். அவனும் இதைப் பற்றிக் கேள்விப் பட்டிருந்தான்.

''மனிதாபிமானமே இல்லாத இந்தச் சமூகம் என்டைக்காவது உருப்படுமா, சிலன்?''

அவள் திடீரென்று அழ ஆரம்பித்தாள். இரண்டு வருஷங்களாகப் பூட்டி வைத்திருந்த துயரத்தையெல்லாம் யாருக்கும் தெரியாமல் இந்த இருளில் புதைக்கும் வேகத்துடன் கண்ணீர் விட்டாள்.

அவன் கலவரத்துடன் நிமிர்ந்து உட்கார்ந்தான். 'கடவுளே, இது என்ன அழுகை இது?' என்ற பதைப்புடன்.

''புனிதா, அழாதீங்க!'' என்றான்.

''இந்தச் சமூகத்தோட பிரதிநிதிதான் மஹேசுவரன்! எனக்கு அந்தத் துக்கமும் கோபமும் ஆறவே ஆருது!'' என்றாள் அழுகையினூடே.

''எனக்கு விளங்க இல்லே!''

''அவர் ஏதாவது போராளிக் கும்பல்லே சேர்ந்து செத்திருந்தாலும் நான் சமாதானமாகியிருப்பேன். மனைவியும் குழந்தைகளும் எக்கேடு கெட்டுப் போகட்டும்னு இப்படிச் சொல்லாம கொள்ளாம ஓடறது எத்தனை இரக்கமில்லாத செயல்! என்னை விட்டு விட்டு அவர் போனது அவர் வீட்டிலே எல்லாருக்கும் சந்தோஷம் என்டு கூடக் கேள்விப்பட்டேன்.''

அவள் மீண்டும் புதிய உத்வேகத்துடன் அழுதாள்.

அடிவயிற்றிலிருந்து அவனுக்குப் பச்சாத்தாபம் சுரந்தது. அவளுடைய துன்பத்தின் ஆழத்துக்குச் சென்றது போல் கனிவு ஏற்பட்டது.

''நீங்கள் இப்படியெல்லாம் நினைச்சுக் கலங்கக் கூடாது. மஹேசுவரன் போனதுக்கு வேறு காரணம் இருக்கலாம்'' என்றபடி குலுங்கும் அவள் தோளைப் பற்றினான். அவனது ஸ்பரிசத்தில் உருகிப் போனவள் மாதிரி அவள் அவன் மார்பில் சாய்ந்து முகத்தைப் புதைத்து விசும்பினாள்.

''சிலன், எனக்கு இப்ப யாருமில்லே. யாருமில்லே!''

அவன் ச ங் க ட த் து ட ன் அவளைச் சமாதானப் படுத்தியபடி, தோளைப் பற்றி விலக்கப் பார்த்தான்.

அவன் சற்றும் எதிர்பாராத விதத்தில் அவள் இரு கைகளாலும் அவனை இறுக அணைத்துக் கொண்டாள்.

அவனுக்கு மூச்சு முட்டிற்று. அவளுடைய மூச்சுக் காற்றும் தேகமும் உஷ்ணமாக இருந்தன. வெறிபிடித்தவள்போல் அவன் முகத்திலும் உடலிலும் தனது அதரங்களைப் பதித்துக் கொண்டு போனாள். அவளுடைய உஷ்ணமும் தாபமும் அவனையும் பற்றிக் கொண்டன.

''மஹேசுவரனும் வரப் போறதில்லே. சிலியாவும் திரும்பப் போறதில்லே சிலன்!''

ஜுரவேகத்தில் புடைத்தெழுந்திருந்த நாடி நரம்புகள் எல்லாம் கண் சொடுக்கும் நேரத்தில் குளிர்ந்து போயின.

அவன் ஆயாசத்துடன் தன்னை விடுவித்துக் கொண்டு எழுந்தான்.

''சிலன், போகாதீர்! சிலன்!''

புனிதா அவன் காலைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள்.

''காலே விடுங்கள்'' என்றான் மெல்ல.

''இல்லே என்டா சத்தம் போடுவேன், இல்லே ஊரை விட்டே நாளைக்குப் போயிடுவேன்.''

அவள் பிடியைத் தளர்த்தினாள். ''இரண்டும் வேண்டாம். நான் ஒரு பைத்தியக்காரி,'' என்று முணுமுணுத்தாள்.

''நீங்கள் இங்கே படுங்கோ. நான் உள்ளே போறேன்,'' என்று எழுந்து உள்ளே சென்றான்.

வெகு நேரத்துக்குத் தூக்கம் வரவில்லை. எல்லாவற்றிற்கும் காரணங்களைத் தேடுவது முட்டாள்தனமானாலும் இன்றைய சம்பவத்திற்குச் சரித்திரக் காரணங்கள் இருப்பதாகப் பட்டது — ஜோஸப் பிஞ்சிலே பழுத்ததற்கும் மஹேசுவரி போதைப் பொருள் கடத்துவதற்கும் இருந்த காரணங்கள் போல —

**ம**றுநாள் காலே கண்விழித்த போது வெட்டவெளிச்சமாகியிருந்தது. பள்ளிக்குச் செல்லும் குழந்தைகள் இருக்கும் வீடுகள் மட்டும் சுறுசுறுப்பாக இருப்பது தெரிந்தது. அவன் எழுந்து முகம் கழுவச் சென்றபோது,

''எழுந்தாச்சா சிலன்? கோப்பி கலக்கலாம் தானே?'' என்றாள் புனிதா சகஜமாக.

''ஓம்'' என்றபடி அவன் சென்றான்.

காப்பியை வாங்கிக் கொள்ளும் போது காலேப் பணியாரமும் அவள் செய்து முடித்திருந்ததை அவன் கவனித்தான்.

முகத்திலோ செய்கைகளிலோ ஒரு மாற்றமும் இல்லே. நேற்று மனசு வெடித்து விட்டது போல் அழுததும் அவனை அணைத்த





தும் இவள்தானு என்று ஆச்சரியம் ஏற்பட்டது.

சீலன் காப்பியைக் கையில் ஏந்திக் கொண்டு வெளித் திண்ணைக்கு வந்தான். இரண்டு வீடு தள்ளி ஒருவர் தமிழ் தினசரித் தாளைப் படித்துக் கொண்டிருந்தார். சீலன் ஒரே விழுங்கில் காப்பியைக் குடித்து, கிளாஸை உள்ளே வைத்துவிட்டு வெளியே வந்தான்.

அவனுக்காகக்காத்திருந்தவர்போல்பத்திரிகை படித்துக் கொண்டிருந்தவர் அவனைப் பார்த்துச் சிநேகிதமாகச் சிரித்தார்.

''வாருங்கோ, முகாமுக்குப் புதுசா?'' என்ருர்.

''ஓம்'' என்றபடி அவன் அவரருகில் அமர்ந்து, ''பத்திரிகை படிச்சாச்சா?'' என்ருன்...

''உம், ஆச்சு. இந்தாங்கோ. என்ன இருக்கு தமிழ்ப் பத்திரிகையிலே! இவங்க அரசியல் அக்கப்போரும் சினிமாவும்தான். நம்ம பிரச்னே இவன்களுக்கு பந்தாட்டம்.

ஜயசிலன் பதில் ஏதும் சொல்லாமல் பத்திரிகைத் தலையங்கத்தின் மேல் பார்வையோட்டினுன். பார்க்க யாழ்ப்பாணத்துத் தமிழ்ப்பத்திரிகைகள்போலத்தான்இருந்தது. செய்தித் தணிக்கை இல்லை இங்கே. அந்தச் சுதந்திரத்தில் மத்திய அரசைத் தாறுமாருகக் கிழித்திருந்தது பத்திரிகை.

ஐந்தே நிமிஷத்தில் அவன் பத்திரிகையைக் கீழே வைத்தான்.

''எழுத்துச் சுதந்திரம் என்கிறது எவ்வளவு பெரிய விஷயம்!'' என்ருன், தனக்குள் பேசிக் கொள்பவன் போல.

''இவங்கள் சொல்றது சரிதானே! உணவுப் பொட்டலங்கள் போட்டதன் நோக்கமென்ன? யாழ் நகரத்துக்குக் கூடக் காணுது! தம்பிக்கு எந்த ஊர்?''

''யாழ்ப்பாணம்.''

''எனக்குப் பரித்துறை. பெயர் குணரத்தினம். உம்ம பெயர் என்னவோ?''

''ஜயசிலன்.''

''புனிதாவுக்கு உறவா?''

''இல்லை. தெரிஞ்சவன். ஒரே ஊர்க்காரன்.''

''சரிதான். நீங்கள் வந்தது புனிதாவுக்குத் துணையாயிருக்கும்.

ஜயசிலன் எழுந்தான்.

''நான் வர்றேன். பிறகு சந்திக்கலாம்.''

குணரத்தினத்தின் முகத்தில் ஏமாற்றம் தெரிந்தது.

''ஏன், இருமேன்! வேலையிருக்கோ?''

''ஓமய்யா.''

பசியில்லை என்ருலும் புனிதா கொடுத்த பலகாரத்தை மறுக்காமல் சாப்பிட்டுவிட்டு வெளியே கிளம்பினுன்.

முகாமில் அங்கங்கே பெரிய பெரிய அலமரங்கள் இருந்ததால் தண்ணென்று இதமாக இருந்தது. ஆங்கிலேயர் காலத்து மிலிட்டரி பாரக்லாம்...



''எல்லா எம்.எல்.ஏக்களும் தங்களுக்குத்தான் மந்திரி பதவி வேணும்னு கேக்கருங்களாம்யாருக்குக் கொடுக்கறதுன்னு முதலமைச்சருக்குப் புரியலையாம்..... கடைசியா ஒரு வழியா.......''

''எப்படி சமாளிச்சாரு?''

''மியூசிகல் சேர் போட்டி வச்சுத்தான்''

— சேத்தூர் அன்பழகன்.

அவன் நேராகப் பெயர்ப் பதிவு அலுவலகத்துக்குச் சென்ருன். இரண்டு நாட்களாகப் பழக்கம் செய்து கொண்டிருந்த குமாஸ்தாவிடம் சென்று, ''இன்னைக்கு வரச்-சொன்னீங்களே ஐயா!'' என்ருன்.

''ஆமாம் வா. சித்த உக்காரு. நேத்து சில புத்தகங்களைப் பார்த்தேன். அதிலே நீ சொன்ன பெயர் இல்லே. இப்ப கொஞ்சம் பார்க்கிறேன்.''

குமாஸ்தா அதில் ஆழ்ந்தார். கட்டடத்துக்கு வெளியில் புதிதாக ஓர் அகதிக் கும்பல் வந்திருந்தது. பெயர் பதிவு நடந்து கொண்டிருந்தது. அடுத்தாற் போல் இருந்த வரவேற்பறையில்.

''ஐடென்டிட்டி கார்ட் எங்கேய்யா?''

''இல்லே.''

''இயக்கத்தைச் சேர்ந்தவனு?''

''சீ.''

''ஏன்யா, எங்கிட்டே கதை விடறே? இல்லேன்னு அடையாளச் சீட்டு இருக்காதா? சரி பெயர், ஊர், வயது எல்லாம் பொய் கலக்காம சொல்லு.''

''சுரேஷ் — வயது 23, ஊர் பாயிண்ட் பெட்ரோ.''

''இதோ பார், இதுக்கு முந்தி நீ என்னவா இருந்தியோ எங்களுக்கு அக்கறையில்லே. இங்கே வாலைச் சுருட்டிக்கிட்டு எந்த வம்பும் செய்யாம இருக்கணும். ஆயுதம் வெச்சிருக்கியா?''

''ஐயோ இல்லேய்யா!''

உள்ளுணர்வின் உந்துதலில் ஜயசிலன் எட்டிப் பார்த்தான். பதிவு ஆபீஸர் முன்னிலையில் நிற்கும் மனிதனைப் பார்த்ததும் பாதாதி கேசம் நடுங்கிற்று.

(தொடரும்)

# மானசீகபீடம்

**போட்டிக் கதை — 12**

சேகர் லாட்ஜின் பதினேழாம் எண் அறையில் கட்டிலில் மல்லாந்து, மேலே சுழன்ற மின்விசிறியின் கண்ணாடிப் பளபளப்பு மையத்தை வெறித்தபடி படுத்திருந்தான் கிருஷ்ணன். தூக்கம் வரவில்லை. பகல் பொழுதைக் கழிப்பதுதான் பெரும் பிரச்னை!

அவனுக்கு முக்கியமானவை மாலை நேரங்கள்தான். ஜான்கே ஆர்க்கெஸ்ட்ராவின் அலுவலகமான மொட்டைமாடி கீற்றுக் கொட்டகையில், வாத்தியக் கருவிகளை மிகவும் நேசித்து, சினிமாப் பாடல்களை ஒத்திகை பார்ப்பதும், கல்யாணங்களிலும் பொது மேடைகளிலும் பிறவியெடுத்ததே அந்தப் பாடலுக்காகத்தான் என்பது போன்ற ஜீவ துடிப்புடன் பாடுவதும், மாலையும் முன்னிரவுமான நேரங்களில்'தான். பகல் பொழுதுகள் வெறுமையானவை; தனிமை நிறைந்தவை. அறையில் தங்கியுள்ள மற்ற மூவரும் தத்தம் உத்தியோகத்துக்குச் சென்றுவிட இவன் மட்டும் தனியனாய்.....

இப்போது அவனுக்கு அலுப்பாக இருந்தது. கட்டிலருகிலிருந்த மேஜையில் டைம்பீஸ் மணி மூன்று என்றது. ஆறு மணிக்கு ரிகர்சலுக்குப் போனால் போதும்.

தனது தற்போதைய நிலையை நினைத்துப் பார்த்தான். தன்னிரக்கம் மிகுந்தது.

ரிகர்சல், ஆர்க்கெஸ்ட்ரா, மேடைகள் என்று சாதாரணப் பாடகனாகவே என் வாழ்க்கை நிலைத்துவிடுமோ? என்றோ அப்பா கோபமாய்ச் சொன்ன வார்த்தைகள் நிஜமாகிவிடுமோ?

''மெட்ராஸுக்குப் போயி பாடகனாகப் போறானாமா? உம் பிள்ளைக்குப் புத்தி கெட்டுப் போச்சா? அவன் படிச்ச படிப்புக்கு உத்யோகம் வாங்கித் தர்றது என் பொறுப்பு. அதுவரைக்கும் சோத்தைத் தின்னுட்டு இங்கேயே கிடக்கச் சொல்லு. அங்கே போயி நாய் படாதபாடு படப் போறான்.''

'சோறு மட்டும்தான் வாழ்க்கையா? பிறவியெடுத்தது தேடிச் சோறு நிதம் தின்பதற்கு மட்டும்தானா? இல்லை! எனக்குள் மறைந்திருக்கும் இசைத் திறமையை நான் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.... புகழென்னும் சிகரத்தின் உச்சியில் நாட்டின் சிறந்த பாடகனாக நான் இருக்க வேண்டும்..'

தன் விருப்பத்தில் பிடிவாதமாக இருந்தான் கிருஷ்ணன். ''இதெல்லாம் இளரத்தத் துடிப்பு. போ! மெட்ராஸுக்கென்ன, டில்லிக்கு வேணும்னாலும் போ! முட்டி மோதி வழி தெரியாம, வாழ முடியாமல் பழையபடி இங்கேதான் வரணும் நீ.''

'ஐயோ! பத்தாம் பசலி அப்பாவே! மோதாமல் எந்தக் கதவும் திறக்காது. தொடர்ந்து காலடிகள் பதியாவிட்டால் பாதை உருவாகாது. தெரியுமா உங்களுக்கு?'

லட்சியங்களையும், நம்பிக்கைகளையும் சுமந்து கொண்டு சென்னைக்கு ரயிலேறினான்.

அவன் யாரிடமும் முறையாகச் சங்கீதம் கற்றுக் கொண்டவனில்லை. சினிமாப் பாடல்களைப் பாடிப் பழகியதோடு சரி. அதிலும் பிரசாத்தின் பாடல்கள் என்றால் மிகவும் பிடிக்கும். அவனது குரல் கூட



பிரசாத்தின் குரலைப் போலவே இருப்பதாகப் பலரும் கூற, பிரசாத்தையே தன் மானசீக குருவாகக் கொண்டு அவர் பாடிய பாடல்களையே பாடங்களாகக் கருதி, பயின்று, பழகி... இன்று ஒரு ஆர்க்கெஸ்ட்ராவில் நிரந்தரப் பாடகனாய் இருக்கிறான்— என்றேனும் ஒருநாள் அதிர்ஷ்டம் தானாகவே வந்து கதவைத் தட்டும் என்ற அசைக்க முடியாத நம்பிக்கையோடு.

அறைக்கதவு தட்டப்பட்டது.

யாரது இந்நேரத்தில்?

கிருஷ்ணன் நிதானமாக எழுந்து கதவைத் திறந்தான்.

எதிரே நின்ற மத்திய வயதுக்காரரை இதற்கு முன் எங்கோ பார்த்த மாதிரி இருக்கிறது. எங்கே என்று ஞாபகம் வரவில்லை.

அந்த பிரஷ் மீசையும், தங்க பிரேம்





''என்னது! சின்ன, சின்ன வீடு ஒண்ணு செட்டப் பண்ணியிருக்கீங்களா?''

''ஆமாங்க, எனக்கு ஏற்கனவே ஒரு சின்ன வீடு இருக்குதுங்களே...

— மணியன் தர்மலிங்கம்.

கண்ணாடியும், லேசான தொந்தியும்... எங்கே இவரைச் சந்தித்தோம் எனக் குழம்பினான்.

''இங்கே.... கிருஷ்ணன்னு ஒரு பாடகர்.....'' வந்தவர் கேள்வியை நிறைவு செய்யுமுன்பே,

''நான்தான் கிருஷ்ணன்'' என்று இவன் சொல்லவும் வந்தவர் முகம் பிரகாசித்தது.

''உள்ளே உட்கார்ந்து பேசுவோமே..'' என்று உரிமையுடன் அறைக்குள் நுழைந்தார். கிருஷ்ணன் சரேலெனப் பின் வாங்கினான். நாற்காலியை நகர்த்திப் போட்டான்.

''உட்காருங்க சார்...''

அறை கலைந்திருந்தது. பிரம்மச்சாரிகளின் அறை என்று பார்த்தமாத்திரத்தில் சொல்லி விட முடிந்தது. கன்னா பின்னா வென்று கொடி கட்டித் தொங்கிக் கொண்டிருந்த ஆடைகள்...., சுவரில் சிரிக்கும் நடிகைகள், கலைந்த புத்தகங்கள், சுத்தம் செய்யப்படாத ஆஷ் டிரே....

'ச்சே!.... அறையா இது... அலங்கோல ராஜ்யம்' என நினைத்தான்.

வந்தவர் சொன்னார். ''நான் எழில் சார் கிட்டேயிருந்து வர்றேன்...''

எழில் சாரா? தமிழகத்தின் பிரபல இசையமைப்பாளரா? அவரிடமிருந்து தன்னைத் தேடிக் கொண்டு ஒருவரா..?

கிருஷ்ணனுக்குப் பதற்றத்தில் ரத்த ஓட்டம் அதிகரித்தது.

''என்ன விஷயமா வந்திருக்கீங்க?'' என்று கேட்கத் துடித்து, வார்த்தைகளை நாக்கு நுனியில் தேக்கிக் கொண்டான்.

''எழில் சார் உங்களைக் கூட்டிட்டு வரச் சொன்னார்....''

கிருஷ்ணன் ஸ்தம்பித்துவிட்டான்.

''ஆமாங்க கிருஷ்ணன். உங்க விலாசம் சார்கிட்டே இருந்ததால் சுலபமாக உங்களைக் கண்டு பிடிச்சாச்சு. திடீர்னு உங்களுக்கு சான்ஸ் தரணும்னு எழில் சாருக்குத் தோணிடுச்சு. அதான் லாட்ஜ் தேடி வந்திருக்கேன்.''

''நீங்க..... யார்னு நான் தெரிஞ்சுக்கலாமா?''

''நானா?... நமஸ்! நமச்சிவாயம்கறது முழுப் பேரு.... எழில் சார்கிட்ட அசிஸ்டெண்டா இருக்கேன்.....'' என்றார் வந்தவர்.

'அதிர்ஷ்டம் மாடியேறி வந்து கதவைத் தட்டுகிறதா? எத்தனையோ இளைஞர்கள் பாடகர்களாகும் ஆசையுடன் வாய்ப்புத் தேடி அலைந்து கொண்டிருக்கையில் தானாகவே என்னைத் தேடி வாய்ப்பு வருகிறதென்றால் அது சாதாரண விஷயமா?'

''என்ன யோசிக்கிறீங்க...? போகலாமா?''

''இப்பவேவா?''

''ஆமா.... உடனே! எழில் சார் ரெகார்டிங் தியேட்டரில் காத்திருக்கார்...''

சில நிமிட அவகாசத்தில் உடை மாற்றிக் கொண்டு கிருஷ்ணன் புறப்பட்டான். லாட்ஜ் வாசலில் கார் காத்திருந்தது.

காரில் பயணமாகும் போதுதான் அவனுக்கு அந்தச் சந்திப்பு ஞாபகம் வந்தது.

**ஆ**றேழு மாதங்களுக்கு முன் எழிலிடம் சான்ஸ் கேட்டுச் சென்றிருந்தான் கிருஷ்ணன். சிகரெட் அட்டையில் எழுதப்பட்ட முகவரியை அவரிடம் கொடுத்தபோது...

''சார்.... நான் நல்லாப் பாடுவேன்....'' என்று இவன் தொடங்கும்போதே ஒரு பாட்டு பாடச் சொன்னார் எழில். கிருஷ்ணன் அப்போதைய சூப்பர்ஹிட் பாடலான ''ஜெயந்தி என் தேவதையே! செவந்தி எதுக்கு கூந்தலிலே...''யைப் பிரசாத்தின் குரலில் அட்சரம் பிசகாமல் பாடினான்.

''ப்ச்! நிறுத்துப்பா. பிரசாத்தை இமிடேட் பண்ணி நீ பாடறதுக்கு உனக்கு ஏன் சான்ஸ் தரணும்? அதுக்குப் பிரசாத்தையே கூப்பிட்டுக்குவேனே.... நீ எதுக்கு?'' என்று கோபமாகவும், கிண்டலாகவும் கூறினார் எழில்.

''சார்....'' என்றான் பதற்றத்துடன்.

''நீ போயிட்டு வாப்பா. இப்போதைக்கு நான் புதுசா யாரையும் அறிமுகப்படுத்தறதா இல்லே... இன்னொரு விஷயம்.. யாரையும் இமிடேட் பண்ணாம, சொந்தமா பாடறதுக்கு முயற்சி பண்ணு.. ஒருவேளை சான்ஸ் கிடைச்சாலும் கிடைக்கும்....''

''சார்...... நான்.......''

''ஷ்! போயிட்டு வாப்பா'' என்றார் முகத்திலறைந்தது போல். அப்போது எழிலுக்குப் பின்னால் இவனை இரக்கத்தோடு பார்த்துக் கொண்டிருந்த முகம்தான் நமச்சிவாயத்தின் முகம்.... இப்போது அவனுக்கு ஞாபகம் வந்து விட்டது.

'ஒரு காலத்தில் என்னைப் போலவே வாய்ப்புத் தேடி அங்காடி நாய் போல் அலைந்த எழில் ஓர் உன்னத நிலைக்கு வந்ததும் என்னை அவமானப்படுத்தித் திருப்பியனுப்பி விட்டார்... இப்போது அவரே எதற்கு ஆளனுப்பி அழைத்து வரச் சொல்லியிருக்கிறார்? அவரைத் தேடி வரும் எத்தனையோ நபர்களில் என்னை மட்டும் ஞாபகம் வைத்திருந்தது எப்படி?'

**எ**ழில், வி.வி. ரெகார்டிங் தியேட்டரில் நான்கைந்து நபர்கள் சூழ, ராஜதர்பாரில் இருப்பது போல அமர்ந்திருந்தார். கிருஷ்

ணன் பெரிதாய் வணங்கினான்.

''வாய்யா நமஸ்! ஆளைத் தேடிப் பிடிச்சுக் கொணர்ந்துட்டியே! பலே!'' கிருஷ்ணனைப் பார்த்து, ''வாப்பா. உட்காரு...'' என்றார்.

''பரவாயில்லைங்க..'' என்று நெளிந்தான் கிருஷ்ணன்.

''சும்மா உட்காருப்பா. கூச்சப் படாதே.''

தயக்கமாய் அமர்ந்தான். அறையிலிருந்த அனைவரும் அவனையே பார்க்க.... தயாரிப்பாளராக இருக்கக் கூடும் என இவன் நினைத்த ஒருவரிடம் எழில் சொன்னார்:

''நான் சொன்னது இந்தப் பையனைத்தான். பிரசாத்தைச் சுத்தமா நகலெடுத்த மாதிரி பாடுவான்... இவனுக்கு லிஃப்ட் கொடுத்து மேலே தூக்கிவிட்டோம்னு பிரசாத் பாடு அப்போதான். ஆட்டம் குளோஸ்! வளர்த்துவிட்ட என்கிட்டேயே தகராறு பண்ணி, கால்ஷீட் தர்றதுக்கு முரண்டு பிடிக்கிறான்யா... நான் யாருன்னு அவனுக்குக் காட்டறேன். இன்னும் ரெண்டே மாசம், அவன் ரெகார்டிங் தியேட்டர் பக்கம் தலை வச்சுக்கூட படுக்க முடியாம பண்ணிடறேன்.'' என்று சூடாகப் பொரிந்து தள்ளினார்.

கிருஷ்ணனிடம், ''தபாரு. நீ பிரசாத்தை இமிடேட் பண்ணி நல்லாவே பாடுவேன்னு தெரியும். இப்போ நான் இசையமைக்கிற படத்துல உனக்கு சான்ஸ் தர்றேன். தொடர்ந்து என் படங்கள்ல பின்னணி பாட சான்ஸ் தருவேன். நீ ஓகோன்னு வந்துருவே. ஆனா ஒண்ணு நீ பாடறதைக் கேட்கிறவங்க அந்தப் பாட்டு பிரசாத் பாடினதுதான்னு நம்பிடணும். அவ்வளவு துல்லியமாப் பாடணும்... என்ன... புரிஞ்சுதா? ஐயப்பன்! அட்வான்ஸ்ஸை எடுங்க, நல்ல நேரத்துல கொடுத்துரலாம்..''

கிருஷ்ணன் எழுந்தான்.

''என்னப்பா எந்திரிச்சுட்டே?''

''நான் வர்றேன் சார்...'' என்றான் கிருஷ்ணன்.

''எங்கே போறே? நீ பாடணும்ப்பா... இப்ப.... இன்னிக்கே..''

''மன்னிக்கணும் சார். ஆறு மாசத்துக்கு முன்னாடி உங்ககிட்டே பிரசாத் சார் மாதிரி பாடிக்காட்டி சான்ஸ் கேட்டதுக்கு, திட்டி அனுப்பிட்டீங்க. இப்போ உங்களுக்கிடையே ஏதோ தகராறு வந்ததும் அவரை ஒழிக்க... அவரோட வாய்ப்புகளையெல்லாம் நசுக்க, என்னை ஒரு கருவியாப் பயன்படுத்திக்க நினைக்கறீங்க... ஆர்க்கெஸ்ட்ராவில் பாடறதால் இப்பவும் பிரசாத் சார் குரலை இமிடேட் பண்ண வேண்டிய கட்டாயத்தில் இருந்தாலும் எனக்குன்னு ஒரு தனி பாணியில் குரலைக் கஷ்டப்பட்டு அமைச்சுக்கிட்டிருக்கேன். அந்தச் சொந்தக் குரலுக்கு சான்ஸ் கிடைக்கறப்போ கிடைக்கட்டும்.

''நான் முறையா யார்கிட்டேயும் சங்கீதம் கத்துக்காதவன். பிரசாத் சாரை மானசீக குருவா நினைச்சுக்கிட்டு அவரோட பாட்டுகளைப் பாடிப்பாடித் திறமையை வளர்த்துக்கிட்டவன் நான். இன்னமும் என் மனசுல ஒரு குருபீடம் அவருக்காக இருக்கு.. என் குருவை அழிக்கிறதுக்காக, அவருடைய தொழில்ல இடையூறு ஏற்படுத்துறதுக்காகத்தான் எனக்கு சான்ஸ் கிடைக்குதுன்னா அப்படி ஒரு வாய்ப்பு எனக்கு வேண்டவே வேண்டாம்.''

எழிலின் முகம் நிறம் மாற, மற்றவர்கள் அதிர்ச்சியோடு அவனைப் பார்க்க நமஸ் மட்டும் ஒரு வித்தியாசமான மனிதனை, லட்சியவாதியைச் சந்தித்த திருப்தியில் பெருமிதத்தோடு அவனை நோக்கினார்.

கிருஷ்ணன் கதவுகளை நோக்கி நடந்தான்.

# மாதம் ஒரு மாவட்டம்

கல்கி ஏற்கும் சமுதாயப் பணி

## நினைவூட்டுகிறோம்!

**மீண்டும் புதுக்கோட்டை, நெல்லை — கட்டபொம்மன், சேலம் மாவட்டங்களுக்கு வருகிறோம்!**

கடந்த ஜனவரி, பிப்ரவரி, மார்ச் மாதக் கல்கி இதழ்களில் புதுக்கோட்டை, நெல்லை — கட்டபொம்மன், சேலம் மாவட்டங்களின் பிரச்னைகள் பற்றி எழுதியிருந்தோம். கூடவே, அந்தந்த மாவட்டக் கலெக்டர் பேட்டியையும் வெளியிட்டிருந்தோம்.

இப்போது அந்தப் பிரச்னைகளெல்லாம் எப்படியிருக்கின்றன? தீர்வு காணப்பட்டனவா, இல்லையா? தீர்வு காணப்பட்டவற்றையும் எழுதுங்கள்; தீர்வு காணப்படாதவற்றையும் எழுதுங்கள். மறுபடியும் நமது நிருபர்கள் வரும் டிசம்பர் மாதத்தில் இந்த மூன்று மாவட்டங்களுக்கும் ரீ — விசிட் செய்ய வருகிறார்கள்.

கடிதங்கள் வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 20.11.87.

உடனடியாக எழுதி அனுப்புங்கள்.

— ஆசிரியர்





# புயல் பாடும் பாட்டு

"உஸ் அப்பாடா, எத்தனை தீபாவளி ரிலீஸ் படங்கள்!" என்று பெருமூச்சு விட்டுக் கொண்டே நாற்காலியில் உட்கார்ந்தார் கழுகு. அவர் உட்கார்ந்த தோரணையில் ஏதோ முக்கியமாய்ச் சொல்லப் போகிறார் என்று தெரிந்தது.

நாம் நினைத்த மாதிரியே, "இந்த வருடம் தீபாவளி ரிலீஸுக்கும் எம். ஜி. ஆருக்கும் நிறையத் தொடர்பு இருக்கிறது. தெரியுமா?" என்றார், புன்சிரிப்போடு.

"ஐயோ, சஸ்பென்ஸ் எதற்கு? நேரடியாய் விஷயத்திற்கு வாருங்களேன்" என்றோம் துடிப்போடு..

"இந்தத் தீபாவளிக்குக் கலைஞரின் இரண்டு படங்கள் ரிலீஸ் ஆகியிருக்கிற விஷயம் உமக்குத் தெரியாதா? கலைஞர் யார்? எம். ஜி. ஆரின் எதிரிதானே?" பெரிய ஜோக் அடித்துவிட்டது போலக் கழுகார் சிரித்தார். "எம். ஜி. ஆர். பார்ப்பதற்காகத் தோட்டத்தில் கலைஞரின் புயல் பாடும் பாட்டு சர்வ ரகசியமாக புரொஜெக்ட் செய்யப்பட்டது. ரகசிய போலீஸ்காரர்களே புரொஜெக்டர்களை இயக்கினார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்..."

"படத்தைப் பார்த்துவிட்டு எம். ஜி. ஆர். என்ன சொன்னாராம்?" என்றோம், ஆர்வத்தை அடக்க முடியாமல்.,

"'எம். ஜி. ஆருக்கு ஓரளவு சந்தோஷம் தான்' என்றார் அவருடைய உதவியாளர். கலைஞரின் கம்பெனி எடுத்த படமாயிற்றே, ஆளும் கட்சியைப்' பயங்கரமாகத் தாக்கியிருப்பார்களோ என்று அவருக்கு முதலில் கவலையாயிருந்ததாம். மந்திரிசபைக் கூட்டம் பற்றி ஒரு காட்சி அமைத்து அதில் மட்டும் ஏகமாய்க் கேலி செய்திருக்கிறார் கலைஞர். மற்றபடி மந்திரியின் மற்ற நடவடிக்கைகளில் அவ்வளவாக நையாண்டி செய்யவில்லையாம்... அதனால் எம். ஜி. ஆர். நிம்மதிப் பெருமூச்சு விட்டாராம்!"

"கதை மந்திரிகளைப் பற்றியதா?"

"நீங்கள் வேறு! கதை மாணவர்களைப் பற்றியது. மாணவர்கள் போதை மருந்துகளுக்கு அடிமையாவதைப் பற்றிக் கண்டித்து ஒரு பெண் ரிப்போர்ட்டர் ஆதாரமான புகைப்படங்களோடு கட்டுரை எழுதப் போக, மந்திரியின் மகன்தான் பலான மருந்துகளை சப்ளை செய்வதால், ஒரு கிளர்ச்சியைத் தூண்டி விடுவது போல் கதையமைப்பு. ஆனால் சட்டசபைத் தொடர் போல் கதை டிராக் மாறிவிடுகிறது. சில மாணவர்கள் ஆத்திரத்தோடு அந்தப் பெண் ரிப்போர்ட்டரைத் தந்திரமாகக் கடத்தி வந்து, பலவந்தமாக அவளுக்கும் போதை ஊசி போட்டு, வன்முறையில் இறங்குவது வரைதான் முதல் பாதிப் படம். ராதிகாதான் பெண் ரிப்போர்ட்டர். அவருடைய நடிப்பைப் பார்த்துவிட்டு, அ. தி. மு. க. விற்குள் இழுத்துக் கொள்ளலாம் என்று கூடப் பேச்சு அடிபடுகிறது!"

"ராதிகா நடிப்பிற்கும், அ. இ. மு. க. விற்கும் என்ன சம்பந்தம்?" என்றோம், புரியாமல்.

"எம். ஜி. ஆர். மிகவும் ரசித்துப் பார்த்ததே ராதிகா சம்பந்தப்பட்ட காட்சிகள் தானாம். மாணவர்கள் பிடியில் சிக்கி, அவர் கதறக் கதறத் துரத்தப்பட்டு, காயப்படுத்தப்பட்டு, பலவந்தமாகப் போதை ஊசி ஏற்றப்படும் காட்சியை ரொம்ப ரொம்ப நீளமாக அமைத்து விட்டாராம் மணிவண்ணன். இதைப் பார்க்கும் தாய்க்குலம், இந்த ஓவர் டோஸ் தாங்காமல், திரைக்கதை எழுதிய கலைஞர் மேல், கோபம் கொள்வார்கள் என்று அ. தி. மு. க. வட்டாரத்தில் பேசப்படுகிறது!"

"அடப் பாவமே..."

"கலைஞர் என்ன சாதாரண மனிதரா? இண்டர்வெல்லுக்கு அப்புறம் மாணவர்களுக்கும், அந்த ரிப்போர்ட்டருக்கும், ரிப்போர்ட்டரைக் காதலிக்கும் இன்ஸ்பெக்டருக்கும் (ரகுவரனுக்கு அந்த வேஷம் பொருத்தமாகவே இல்லாதது வேறு விஷயம்) இடையில் செண்டிமெண்டல் காட்சிகளைப் போட்டுச் சரிக்கட்டியிருக்கிறாரே...?"

"அதுதானே பார்த்தோம்!"

"எப்படியானால் என்ன? இண்டர்வெல்லுக்கு அப்புறம் படத்தில் கறுகறுப்போ, கட்டுக் கோப்போ இல்லை. அவசரக் கோலம் என்பார்களே, அ ப் ப டி இருக்கிறது... இத்தனைக்கும் கலைஞரின் 'குரலில் முன்னுரை, முடிவுரை எல்லாம் வைத்திருக்கிறார்கள். கட்சிக்காரர்கள் ஆதரவு இருந்தால் படம் ஓடும் என்கிறார்கள். தில்லி வரை நான் பறக்க வேண்டும். அப்புறம் சந்திப்போம்" என்று சொல்லிவிட்டு மிஸ்டர் கழுகு பறந்து விட்டார்.

மிஸ்டர் கழுகை வழியனுப்பிவிட்டு உள்ளே நுழைந்து செய்தித் தாளைக் கையில் எடுத்ததுதான் தாமதம், வாசலில் படபட வென்று மிஸ்டர் கழுகாரின் இறக்கை யொலி கேட்டது.

# செல்லக்குட்டி





வாசலுக்கு மறுபடி விரைந்தோம். புயல் போல் உள்ளே நுழைந்து நாற்காலியில் அமர்ந்து கொண்டார்.

''வர வர நம் விமான சர்வீஸெல்லாம், ரயில்வே சர்வீஸ் போல் ஆகிவிட்டது. தில்லி ப்ளேன் புறப்பட இன்னும் ஒரு மணி நேரம் ஆகுமாம்'' என்றார், சலிப்போடு. கூடவே, 'செல்லக்குட்டி' பார்த்தீர்களா?'' என்று வாய் நிறையத் தமது usual சிரிப்போடு கேட்டார்.

''அதுயார் செல்லக்குட்டி?'' என்று திகைப்போடு வினவினோம்.

''தேவர் ஃபிலிம்ஸ் எடுத்திருக்கும் படம். ஒரு குட்டி யானை வருகிறது பாருங்கள். ஏதோ ஒரு காட்டிலிருந்து மெட்ராஸ் வரை பஸ்ஸின் பெயர்ப் பலகையைப் பார்த்துக் கொண்டே ஓடி வருகிறது. குரங்கு காசெட்டை எடுத்து வைத்துக் கொண்டு விளையாடுகிறது...'' என்று சொல்லிவிட்டு முழியை ஒரு முறை உருட்டினார் மிஸ்டர் கழுகார்.

''படத்தில் அரசியல் கலப்பே இருக்காதே. வேலை மெனக்கெட்டு இந்தப் படத்தை ஏன் போய்ப் பார்த்தீர்கள்?'' என்று விஷமமாகக் கேட்டோம்.

''என் காலையே வாருகிறீர்களே. ரொம்ப நாட்களுக்குப் பிறகு யானையெல்லாம் வைத்துப் படம் வந்திருக்கிறதே. ஒரு மாறுதலாக இருக்குமே என்றுதான் போனேன். எம். ஜி. ஆரை வைத்து 'நல்ல நேரம்' என்று ஒரு படம் எடுத்தார்களே...''

''ஆமாம், ஆமாம்.''

''எம். ஜி. ஆர். என்றவுடன் உமக்குச் செய்தி கேட்கும் அவசர புத்தி. அந்த நல்ல நேரத்திலிருந்து ஒரு காட்சியைச் சேர்த்து விட்டிருக்கிறார்கள். அது மட்டுமில்லை. கதை கூட அந்த நல்ல நேரத்தை 'உல்டா' பண்ணியதுதானாம். வட்டாரத்தில் பேசிக் கொள்கிறார்கள். ஒரு காட்டு அதிகாரிக்கும், ஒரு பெரிய மனிதருக்கும் மோதல். பெரிய மனிதர் சூழ்ச்சியால் காட்டு அதிகாரி ஜெயிலுக்குப் போகிறார். அதிகாரியின் மனைவி, அவருடைய மகன், குட்டி யானை எல்லோரும் சேர்ந்து மெட்ராஸுக்கு வந்த அந்தப் பெரிய மனிதரைப் பழிவாங்குகிறார்கள்.''

''இது எல்லாத் தேவர் படங்களிலும் வருகிற கதைதானே?''

''நடிகர்கள் மாறுகிறார்கள். டைரக்டர் மாறியிருக்கிறார். இசையமைப்பாளர் மாறியிருக்கிறார். கதை மட்டும் பழைய கதையாக இருந்தால் என்னவாம்?'' நம்மை மடக்கிய திருப்தியுடன் காலரைத் தூக்கி விட்டுக் கொண்டார் கழுகார்.

''அது சரி.''

''சரத்பாபு, சுஜாதா, ரவிச்சந்திரன், ராதா ரவி இவர்களையெல்லாம் பார்க்கும் போது ஏதோ பத்து வருடங்களுக்கு முன்னால் பார்த்த படம் போல் இருக்கிறது. இருக்கட்டும். கிட்டே வாரும். உம் காதில் மட்டும் ஒரு ரகசியம்...''

''என்ன... என்ன?'' என்று ஆவலாய் நெருங்கினோம்.

''மிசா போல் புதிதாக ஒரு சட்டம் வரப் போகிறது. டிஸ்கோ சாந்தி போன்றவர்களையெல்லாம் அரைகுறையாக ஆடவிட்டால், ஆடியவர்கள், அவரை ஆட வைத்தவர்கள் எல்லோரையும் ஒரு வருட காலத்திற்கு ஏதாவது ஒரு பாலைவனத்தில் கொண்டு போய் இறக்கி விடப் போகிறார்கள். இது எனக்கு மட்டும் தெரிந்த விஷயம். சம்பந்தப்பட்டவர்கள் இப்போதே உஷாராகி விடுவது நல்லது.''

''ஓஹோ, இதிலும் டிஸ்கோ சாந்தி டான்ஸா?''

''ஆமாம். கண்றாவி. அதைப் பற்றிப் பேசினால் நீரும் பாலைவனம்தான்!''

கப்பென்று வாயை மூடிக் கொண்டோம். எங்கள் நிலைமையைப் பார்த்துக் கழுகாரே வாயைத் திறந்தார்.

''கங்கை அமரன்தான் இசை. ஓஹோ என்று சொல்லிக் கொள்கிற மாதிரி இல்லை. படத்தில் வரும் அந்த மோசமான டான்ஸெல்லாம் இல்லாவிட்டால் போனால் போகிறதென்று குழந்தைகளைக் கூட்டிக் கொண்டு போய் வரலாம். யானை தன் தலையில் மண்ணைப் போட்டுக் கொள்கிற மாதிரி அதையும் படம் எடுத்தவர்களே கெடுத்து விட்டார்கள்'' என்றவர் மணிக்கட்டைத் திருப்பி வாட்சைப் பார்த்தார்.

''அடேடே, தில்லி ப்ளேன் போச்சு. நான் பறந்தே தில்லிக்குப் போய்விடுகிறேன்'' என்று கூறி எழுந்தார்.

— ஜூனியர் விகடன் மிஸ்டர் கழுகைக் கடத்தி வந்து கற்பனை ரிப்போர்ட் எழுதியது:

— ஜெயமன்மதன்

# பொன்னியின்

## அத்தியாயம் 29

## யானைப் பாகன்



ரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் — இந்தக் கதை நடந்த காலத்துக்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால், — வலஹம்பாஹு என்னும் சிங்கள அரசன் ஒருவன் இருந்தான். அவனுடைய காலத்திலும் தமிழர் படை இலங்கையின் மீது படையெடுத்துச் சென்றது. அப்போது வலஹம்பாஹு என்பான் தலைநகரிலிருந்து தப்பி ஓடித் தம்பளை என்னுமிடத்திலிருந்த மலைக்குகையில் ஒளிந்து கொண்டிருந்தான். பிறகு அவன் மீண்டும் படை திரட்டிக் கொண்டு சென்று அநுராதபுரத்தைக் கைப்பற்றினான். அவனுக்கு அபயமளித்திருந்த மலைக்குகையை மேலும் குடைந்தெடுத்துக் கோயிலாக்கினான். புத்தர் பெருமானிடம் தன் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுவதற்காக அந்தக் குகைக்குள்ளே பெரிதும் சிறிதுமாய்ப் பல புத்தர் சிலைகளை நிர்மாணிக்கச் செய்தான். நூற்றுக்கணக்கான புத்தர் சிலைகளை நிர்மாணித்த சிற்பிகளுக்குத் தங்கள் சிற்பத் திறலை முழுதும் காட்டி விட்டோம் என்ற திருப்தி ஏற்படவில்லை. எனவே ஹிந்து தெய்வங்களின் படிமங்கள் சிலவற்றையும் புத்தர் சிலைகளுக்கு இடையில் நிர்மாணித்து வைத்தார்கள். அந்த அற்புதமான சிற்பக் கலை அதிசயங்களை இன்றைக்கும் தம்பளை என்னும் ஊரில் உள்ள குகைக் கோயிலில் காணலாம்.

வந்தியத்தேவன் அந்தப் புண்ணிய ஸ்தலத்துக்குள் பிரவேசித்த போது ஒரு புது உலகத்துக்குள் வந்துவிட்டதாகவே அவனுக்குத் தோன்றியது. புது மலர்களின் நறுமணம் அவனுக்கு மயக்கத்தை அளித்தது. வீதி முனைகளில் தாமரை மொட்டுக்களும் செண்பக மலர்களும் குப்பல் குப்பலாகக் குவிக்கப்பட்டிருந்தன. பக்தர்கள் அம்மலர்களை வாங்கி அழகிய ஓலைக் கூடைகளில் எடுத்துக் கொண்டு கோயிலை நோக்கிச் சென்றார்கள். ஸ்திரீகளும் புருஷர்களும் அடங்கிய அந்தப் பக்தர் கூட்டங்கள் தெருக்களை அடைத்துக் கொண்டு சென்றன. காவித் துணி அணிந்த புத்த சந்நியாசிகளும் அங்

மரர் கல்கி

# செல்வன்

கங்கே காணப்பட்டார்கள். "சாது சாது" என்ற பெருங்கோஷம் பக்தர் கூட்டத்திலிருந்து எழுந்தது.



வையெல்லாம் வந்தியத்தேவனுக்கு மிக்க வியப்பை அளித்தன. ஆழ்வார்க்கடியானைப் பார்த்து "நாம் யுத்த கேந்திரத்துக்கு வருவதாக எண்ணினோம். இது புத்த க்ஷேத்திரமாகவல்லவா இருக்கிறது?" என்றான்.

"ஆம், அப்பா! ஆயிரம் வருஷமாக இது பிரசித்தி பெற்ற புத்த க்ஷேத்திரமாயிற்றே?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"ஆனால் இது சோழ சைன்யத்தின் வசத்திலுள்ளது என்று சொன்னீரே?"

"ஆமாம்; இப்போதும் அப்படித்தான் சொல்கிறேன்."

"சோழ வீரர்கள் யாரையும் இங்கே காணோமே?"

"ஊருக்கு வெளியில் படை வீடுகளில் இருக்கிறார்கள். அப்படி இளவரசருடைய கட்டளை."

"எந்த இளவரசர்?"

"ஏன்? நாம் யாரைத் தேடிக்கொண்டு வந்திருக்கிறோமோ, அந்த இளவரசர்தான்!"

"அதைப் பற்றி உம்மைக் கேட்க வேண்டுமென்று இருந்தேன். இளவரசரை இங்கே தேடிவிட்டு, 'இல்லை' என்று கண்டு பார்த்திபேந்திரன் திரும்பிப் போய்க் கொண்டிருக்கிறானே? அவரை நாம் இங்கே மறுபடியும் தேடுவதில் என்ன பயன்?"

"அந்தப் பல்லவன் 'இல்லை' என்று சொன்னதனால் நான் நம்பிவிடுவேனா? நானே தேடிப் பார்த்துத்தான் தெரிந்து கொள்வேன். இரணியன் 'ஹரி' என்கிற தெய்வம் இல்லை என்று சொன்னான். அதைப் பிரஹ்லாதன் நம்பி விட்டானா?"

"ஓ வீர வைஷ்ணவரே! நம்முடைய நாட்டில் சைவர்களுடன் ஓயாமல் சண்டை பிடித்துக் கொண்டு வந்தீரே? இங்கே இத்தனை புத்த சந்நியாசிகள் போகிறார்கள், நீர் பாட்டுக்குச் சும்மா வருகிறீரே? என்ன காரணம்? எதிரிகளின் கூட்டம் அதிகமாயிருப்பதைக் கண்டு பயந்துபோய் விட்டீரா?"

"தம்பி! பயம் என்பது என்ன? அது எப்படியிருக்கும்?"

"கறுப்பாய், பூதாகாரமாய், யானையவ்வளவு பெரிதாக இருக்கும். நீர் பார்த்ததேயில்லையா?"

"இல்லை" என்று ஆழ்வார்க்கடியான் சொல்லிவிட்டு, வீதி ஓரத்தில் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த இரண்டு மனிதர்களை அணுகினான். அவர்கள் தமிழர்கள்போல் தோன்றினார்கள். அவர்களிடம் சிறிது நேரம் ஏதோ பேசிவிட்டு ஆழ்வார்க்கடியான் திரும்பி வந்தான்.

"வைஷ்ணவரே! அவர்களிடம் என்ன கேட்டீர்? விஷ்ணு பெரியவரா, புத்தர் பெரியவரா என்று கேட்டீரா? இந்த ஊரில் யாரைக் கேட்டாலும் 'புத்தர் பெரியவர்' என்றுதான் சொல்வார்கள். ஒவ்வொரு புத்தர் சிலையும் எவ்வளவு பிரம்மாண்டமாய் இருக்கிறது, பார்க்கவில்லையா?"

"தம்பி! என்னுடைய வீர வைஷ்ணவத்தையெல்லாம் இராமேசுவரத்தில் மூட்டை கட்டி வைத்துவிட்டு இங்கே ராஜ காரியமாக வந்திருக்கிறேன், தெரிகிறதா?"

"பின்னே அந்த மனிதர்களிடம் என்ன கேட்டீர்? இளவரசரைப் பற்றி விசாரித்தீரா?"

"இல்லை; இந்த ஊரில் இன்றைக்கு என்ன விசேஷம் என்று கேட்டேன்."

"அவர்கள் என்ன சொன்னார்கள்?"

"இன்றைக்கு இங்கே சீன யாத்திரீகர்கள் இரண்டு பேர் வரப்போகிறார்களாம்; அதை முன்னிட்டுப் புத்த விஹாரத்தில் உற்சவம் நடக்கிறதாம்;

அதனாலேதான் ஊரில் இந்தக் கோலாகலம் என்று தெரிவித்தார்கள்."

"சீன யாத்திரிகர்கள் எங்கிருந்து வருகிறார்களாம்?"

"நேற்று இங்கு வந்துவிட்டுச் சிம்மகிரிக்குப் போனார்களாம். சிம்மகிரியிலிருந்து இப்போது வந்துகொண்டிருக்கிறார்கள் என்றும் இன்னும் சற்று நேரத்தில் இங்கே வந்து விடுவார்கள் என்றும் தெரிவித்தார்கள்."

"சிம்மகிரி எங்கே இருக்கிறது?"

"இங்கிருந்து காத தூரத்தில் இருக்கிறது. இன்னும் சிங்களவர் வசத்தில் இருக்கிறது. பகல் வேளையாயிருந்தால் இங்கிருந்தே பார்க்கலாம். சிம்மகிரி குன்றின் உச்சியில் ஒரு பலமான கோட்டை இருக்கிறது. அங்கேயுள்ள ஒரு குகையில் அற்புதமான அழியாவர்ணச் சித்திரங்கள் இருக்கின்றன. அந்தச் சித்திரங்களைப் பார்க்கத்தான் சீன யாத்திரிகர்கள் அங்கே போயிருக்க வேண்டும். குன்றில் ஏறி இறங்குவதற்குப் பெரிதும் கஷ்டப்பட்டிருப்பார்கள்... அதோ பார்!"



ழ்வார்க்கடியான் சுட்டிக் காட்டிய இடத்தில் அலங்கரித்த பெரிய யானை ஒன்று வந்து கொண்டிருந்தது. அதன் அம்பாரியில் இரண்டு பேர் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களுடைய தோற்றமும் உடையும் அவர்கள்தான் சீன யாத்திரிகர்கள் என்று புலப்படுத்தின. யானைப்பாகன் ஒருவன் கையில் அங்குசத்துடன் யானையின் கழுத்தின் மீது வீற்றிருந்தான். யானையைச் சுற்றிச் சூழ்ந்து வந்த ஜனங்கள் பலவித ஆரவார கோஷங்களைக் கிளப்பினார்கள்.

"பார்த்தாயா?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"பார்த்தேன், பார்த்தேன்! அம்மா! எவ்வளவு பெரிய யானை? பக்கத்திலே எங்கேயாவது பள்ளமிருக்கிறதா என்று பார்க்கலாமா?"

"வேண்டாம், வேண்டாம். வீதியில் சற்று ஒதுங்கி நின்றால் போதும்."

அவ்விதமே அவர்கள் யானை நெருங்கி வந்ததும் வீதி ஓரமாக ஒதுங்கி நின்றார்கள்.

யானை அவர்களைக் கடந்து சென்றது; ஜனக்கூட்டமும் யானையைத் தொடர்ந்து சென்றது.

வந்தியத்தேவன் அம்பாரியில் வீற்றிருந்த யாத்திரிகர்கள் மீதே கண்ணாயிருந்தான். புத்தர்களின் புண்ணிய க்ஷேத்திரங்களைத் தரிசிப்பதற்காக எவ்வளவோ தூரம் பிரயாணம் செய்து எத்தனையோ கடல்களைக் கடந்து வந்த அந்தச் சீனர்களின் பக்தியை நினைத்து வியந்தான். அவர்களுக்கு இங்கே இவ்வளவு உபசாரங்கள் நடப்பது நியாயமான காரியந்தான். ஆனால் யுத்தம் நடந்து கொண்டிருக்கும் காலத்திலும் இவர்கள் யாத்திரைக்குப் பங்கமில்லாமல் நடப்பது எவ்வளவு அதிசயமானது? இளவரசர் அருள்மொழி வர்மரின் ஏற்பாடாகத்தானிருக்க வேண்டும். இவ்வளவு பெருந்தன்மையான காரியங்களைச் செய்யக்கூடியவர் அவர்தான். ஆனால் இப்போது அவர் எங்கே இருப்பார்? அவரைத் தேடிப் பிடிப்பது சாத்தியமா? இந்த வைஷ்ணவனோடு இவ்வளவு கஷ்டத்துடன் பிரயாணம் செய்து வந்தது வீணாகி விடுமோ?...

"தம்பி! பார்த்தாயா?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"பார்த்தேன்."

"என்ன தெரிந்தது?"

"சீன யாத்திரீகர்களின் முகம் சப்பையாகத் தெரிந்தது. அவர்களுடைய உடை விசித்திரமாயிருந்தது..."

"யாத்திரீகர்களைப் பற்றி நான் கேட்கவில்லை."

"பின்னே?"

"யானைப் பாகனைக் கவனித்துப் பார்த்தாயா என்று கேட்டேன்."

"யானைப் பாகனையா? நான் கவனிக்கவேயில்லையே?"

"அழகாயிருக்கிறது. அந்த யானைப் பாகனுடைய பார்வை தற்செயலாக நம் பேரில் விழுந்ததும் அவனுடைய கண்களில் ஜொலித்த ஒளியைக் கவனிக்கவில்லையா?"

"அது என்ன? யானைப் பாகனுடைய கண்களில் தீவர்த்தி போட்டிருக்கிறதா ஜொலிப்பதற்கு?"

"நல்ல ஆள் நீ! உன் அஜாக்கிரதையை நினைத்து ஆச்சரியப்படுவதா

அல்லது இவ்வளவு முக்கியமான காரியத்தை உன்னை நம்பி ஒப்புவித்து அனுப்பினாளே, அந்த இளைய பிராட்டியின் காரியத்தைக் குறித்து ஆச்சரியப்படுவதா என்று தெரியவில்லை. போனது போகட்டும். என்னோடு வா!"

யானைக்கும் யானையைச் சூழ்ந்து நின்ற கூட்டத்துக்கும் பின்னால் சற்று தூரத்தில் இவர்களும் தொடர்ந்து போனார்கள்.

புத்தவிஹாரத்தின் வாசலில் வந்ததும் யானை நின்றது. பிறகு யானைப் பாகன் ஏதோ சொல்லவும் யானை மண்டியிட்டுப் படுத்தது. யாத்திரீகர்கள் இறங்கினார்கள். புத்தவிஹாரத்தின் வாசலில் கும்பலாக நின்ற புத்த பிக்ஷுக்கள் சீன யாத்திரீகர்களை வரவேற்றார்கள். சங்கங்கள் முழங்கின. ஆலாட்ச மணிகள் ஒலித்தன. விஹாரத்தின் மேல் மாடத்திலிருந்து மலர் மாரி பொழிந்தது. "புத்தம் சரணம் கச்சாமி" என்ற கோஷம் வானளாவியது. சீன யாத்திரீகர்கள் இருவரும் விஹாரத்துக்குள் சென்றார்கள். கூட வந்தவர்களிலும் பெரும்பாலோர் அவர்களைத் தொடர்ந்து விஹாரத்துக்குள்ளே சென்றார்கள்.

யாத்திரீகர்கள் இறங்குவதற்கு முன்பே யானையின் கழுத்திலிருந்து இறங்கிவிட்ட யானைப் பாகன், யானையை எழுப்பி நடத்திக் கொண்டு சென்றான். சற்றுத் தூரத்தில் நின்றிருந்த நாலு பேரைப் பார்த்தான். அவர்களில் ஒருவனிடம் யானையை ஒப்புவித்தான். இன்னும் ஒருவனிடம் ஆழ்வார்க்கடியானைச் சுட்டிக் காட்டி ஏதோ சொன்னான். மற்ற இருவரையும் அழைத்துக் கொண்டு சென்று சிறிது நேரத்தில் வீதியின் ஒரு திருப்பத்தில் திரும்பி மறைந்தான்.

யானைப் பாகன் எந்த ஆளுக்கு ஆழ்வார்க்கடியானைச் சுட்டிக் காட்டினானோ அவன் இவர்கள் நின்ற இடத்தைநோக்கிவந்தான். ஆழ்வார்க்கடியானிடம் மெல்லிய குரலில், "ஐயா! என்னுடன் வருவதற்குச் சம்மதமா?" என்று கேட்டான்.

"அதற்காகவே காத்திருக்கிறோம்" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"அடையாளம் ஏதாவது உண்டா?"

சேநாதிபதி கொடுத்திருந்த கொடும்பாளூர் முத்திரை மோதிரத்தை ஆழ்வார்க்கடியான் காட்டினான்.

"சரி, என் பின்னால் வாருங்கள்" என்று சொல்லிவிட்டு அவன் முன்னால் செல்ல, இவர்கள் பின் தொடர்ந்து சென்றார்கள். ஊரைத் தாண்டி அப்பால் சென்றதும் குறுகிய காட்டுப் பாதை ஒன்று தென்பட்டது. அதன் வழியே சிறிது தூரம் சென்றதும் பாதையிலிருந்து சற்று விலகியிருந்த ஒரு பாழும் மண்டபத்தை அடைந்தார்கள். அதில் சிறிது நேரம் காத்திருக்க வேண்டும் என்று அவர்களை அழைத்து வந்தவன் தெரிவித்தான். பிறகு அவன் ஒரு மரத்தின் மேலேறி அவர்கள் வந்த வழியைக் கூர்ந்து கவனிக்கத் தொடங்கினான்.

"இதெல்லாம் என்ன மர்மம்? எனக்கு ஒன்றும் புரியவில்லையே?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"எல்லாம் சீக்கிரத்தில் புரிந்து விடும். கொஞ்சம் பொறுத்திரு!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

அந்தப் பாழும் மண்டபத்தின் பின்னால் இரண்டு குதிரைகள் கட்டப்பட்டிருந்தன. குதிரைகள் இரண்டுதான் என்பது வந்தியத்தேவனுக்குக் கொஞ்சம் கவலையை உண்டாக்கியது.

யானைப் பாகனைப் பற்றிய மர்மம் என்னவாயிருக்கும்? அவனுடைய முகத்தை ஒரே ஒரு கணம் வந்தியத்தேவனுடைய கண்கள் ஏறிட்டுப் பார்த்திருந்தன. அப்புறம் சீன யாத்திரீகர்களிடம் அவன் கவனம் சென்று விட்டது. யானைப் பாகனுடைய முகத்தை நினைத்துப் பார்க்க ஆன மட்டும் முயன்றான். ஒன்றும் நினைவுக்கு வரவில்லை.

"வைஷ்ணவரே! அந்த யானைப் பாகன், யார்? எனக்குச் சொல்லக் கூடாதா?"

"யாராயிருக்கும்? நீயே ஊகித்துப் பார், தம்பி!"

"யானைப் பாகன்தான் பொன்னியின் செல்வரா?"

"அவருடைய கண்களில் ஒருகணம் ஜொலித்த பிரகாசத்திலிருந்து அப்படித்தான் தோன்றியது."

"உம்மைப் போல் மற்றவர்களும் அவரைத் தெரிந்து கொண்டிருக்க மாட்டார்களா?"

"மாட்டார்கள். சீனத்திலிருந்து வந்த யாத்திரீகர்களுக்கு இளவரசர் யானைப் பாகராயிருப்பார் என்று யார் எதிர்பார்ப்பார்கள்? மேலும் இந்த ஊரிலுள்ள ஜனங்கள் இளவரசரைப் பார்த்ததும் இல்லை."

"சீன யாத்திரீகர்கள் சிம்மகிரியிலிருந்து வந்தார்கள் என்று சொன்னீர் அல்லவா?"

"ஆமாம்."

"சிம்மகிரி இன்னும் சிங்களவர் வசத்தில் இருக்கிறது என்று நீர் சொல்லவில்லையா?"

"சொன்னேன்."

"பின்னே, எதிரிகளுக்கு மத்தியில் போய்விட்டா இளவரசர் திரும்பி வருகிறார்?"

"சிம்மகிரி மட்டும் என்ன? பகைவருக்குட்பட்ட பிரதேசத்தின் மத்தியில் உள்ள மாஹியங்கனை, சமந்தகூடம் முதலிய க்ஷேத்திரங்களுக்கும் இளவரசர் சீன யாத்திரீகர்களுடன் போய்த் திரும்பியிருக்கிறார்."

"எதற்காக அவ்வளவு பெரிய அபாயத்துக்கு உட்பட்டார்?"

"அந்த க்ஷேத்திரங்களையும் அங்கேயுள்ள சிற்ப சித்திர அதிசயங்களையும் பார்ப்பதில் உள்ள அளவு



கடந்த ஆசையினால்தான்!''

''நல்ல ஆசை! நல்ல இளவரசர்! இத்தகைய விளையாட்டுப் புத்தியுள்ளவரையா முடி மன்னர் வணங்கும் ஏக சக்ராதிபதி யாவார் என்று அந்தக் குடந்தை ஜோஸியர் சொன்னார்?''

''அவ்வாறு குடந்தை ஜோஸியர் சொன்னாரா, தம்பி?''

''நீரும் அதை நம்புகிறீரா?''

''நான் ஜோசியத்தை நம்பவில்லை. ஜோசியம் பார்க்க வேண்டிய அவசியமும் எனக்கு இல்லை.''

''பின்னே என்ன?''

''ஜோசியம் பார்க்காமலேயே எனக்கு நிச்சயமாய்த் தெரியும்......''

திடீரென்று குதிரைகளின் குளம்புச் சத்தம் கேட்டது. அவர்கள் இருந்த இடத்தை நோக்கிச் சத்தம் நெருங்கி வந்து கொண்டிருந்தது. மரத்தின் மேலிருந்து பார்த்துக் கொண்டிருந்தவன் அவசரமாகக் கீழே இறங்கினான். இரண்டு குதிரைகளையும் பிடித்துக் கொண்டு வந்தான். ஒன்றில் தான் ஏறிக் கொண்டான். ஆழ்வார்க்கடியானை இன்னொன்றின்மேல் ஏறிக் கொள்ளச் சொன்னான். ''சற்று நேரத்தில் இந்தப் பாதையுடன் சில குதிரைகள் போகும். அவற்றின் பின்னோடு நாமும் தொடர்ந்து போக வேண்டும்'' என்றான்.

வந்தியத்தேவன் ''எனக்குக் குதிரை?'' என்று கேட்டான்.

''இவரை மட்டுந்தான் அழைத்து வரும்படி எனக்குக் கட்டளை!''

''யாருடைய கட்டளை?''

''அதைச் சொல்ல எனக்கு அதிகாரம் இல்லை.''

''இளவரசரை நான் உடனே பார்த்தாக வேண்டும். மிக முக்கியமான செய்தி கொண்டு வந்திருக்கிறேன்.''

''அதைப் பற்றி



எனக்கு ஒன்றும் தெரியாது, ஐயா!''

ஆழ்வார்க்கடியான் "தம்பி! கொஞ்சம் பொறுமையாயிரு! நான் போய் இளவரசரிடம் சொல்லி உன்னையும் அழைத்து வருவதற்கு ஏற்பாடு செய்கிறேன்'' என்றான்.

"வைஷ்ணவரே! நான் கொண்டு வந்திருக்கும் செய்தி மிக முக்கியமானது, மிக அவசரமானது என்று உமக்குத் தெரியாதா?''

"அந்த ஓலையை என்னிடம் கொடு; நான் கொடுத்து விடுகிறேன்.''

"அது முடியாது.''

"அப்படியானால் கொஞ்சம் பொறுத்திரு; வேறு வழி இல்லை!''

"வேறு வழி இல்லையா?''

"இல்லவே இல்லை!''

வந்தியத்தேவனுடைய உள்ளம் குமுறியது. ஆழ்வார்க்கடியானை இளவரசரிடந்தான் அழைத்துப் போகிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆழ்வார்க்கடியான் அவரிடம் என்ன சொல்கிறான் என்பதைச் சேநாதிபதி கவனிக்கச் சொல்லியிருக்கிறார். அது முடியாமற் போய்விடுமே?

குதிரைகள் நெருங்கிவந்தன; அவர்கள் இருக்கும் இடத்தைக் கடந்து சென்றன; மின்னல் மின்னும் வேகத்தில் பறந்து சென்றன.



ண்டபத்தில் குதிரைகள் மீது ஆயத்தமாயிருந்த இருவரும் குதிரையின் முகக் கயிற்றை இழுத்துக் குலுக்கிப் புறப்படத் தூண்டினார்கள். அச்சமயத்தில் யாரும் எதிர்பாராத ஒரு சம்பவம் நிகழ்ந்தது. குதிரை மேலிருந்த மனிதனுடைய ஒரு காலை வந்தியத்தேவன் பிடித்து ஒரு எத்து எத்தித் தள்ளினான். அந்த மனிதன் தடால் என்று கீழே விழுந்தான். வந்தியத்தேவன் குதிரை மீது தாவி ஏறினான். குதிரை பறந்தது. தொடர்ந்து ஆழ்வார்க்கடியானுடைய குதிரையும் பறந்தது. கீழே விழுந்த வீரன் கூச்சலிட்டு விட்டு உறையிலிருந்த கத்தியை எடுத்து எறிந்தான். வந்தியத்தேவன் தலை குனிந்து குதிரையின் முதுகோடு ஒட்டிப் படுத்துக் கொண்டான். வீரன் எறிந்த கத்தி வேகமாகச் சென்று ஒரு மரத்தில் ஆழமாகப் பாய்ந்தது. குதிரைகள் இரண்டும் காற்றாய்ப் பறந்து சென்றன.

முன்னால் சென்ற மூன்று குதிரைகளையும் பின் தொடர்ந்து ரொம்பவும் நெருங்காமலும் ரொம்பவும் பின் தங்காமலும் இந்த இரண்டு குதிரைகளும் சென்றன. "நல்ல வேலை செய்தாய், தம்பி!'' என்று ஆழ்வார்க்கடியான் வந்தியத்தேவனை உற்சாகப்படுத்தினான். ஆனால் வந்தியத்தேவன் மறுமொழி ஒன்றும் கூறவில்லை. இதன் முடிவு என்ன ஆகப் போகிறதோ என்று அவன் உள்ளம் கவலையில் ஆழ்ந்திருந்தது. ஒரு பெண்ணின் வார்த்தையின் பொருட்டு எதற்காகக் கடல் கடந்து இந்தத் தூர தேசத்தில் வந்து, இத்தகைய சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டோம் என்ற சிந்தனையும் உதித்தது.

குதிரைகள் வாயுவேக மனோவேகமாய்க் குறுகிய காட்டுப் பாதையில் போய்க் கொண்டிருந்தன.

(தொடரும்)

---



வெள்ளமோ...... வறட்சியோ.... பாதிக்கப்பட்ட மக்களுக்கு வேண்டிய பொருட்கள் அவர்களைச் சென்றடைவதற்கு முன்பு அரசு அதிகாரி முதல் அமைச்சர்கள் வரை, வெவ்வேறு நிலையிலுள்ள சுமார் இருபத்தொன்பது பேர்களின் ஒப்புதலுக்காகக் காத்திருக்க வேண்டியிருக்கிறது. இதனால் பொருட்களின் பற்றாக்குறையைவிட, அது உரிய பகுதிகளுக்குச் சென்றடைய ஏற்படும் தாமதத்தினாலேயே பலர் தவிக்க நேரிடுகிறது.

ஆதாரம்: 'எகனாமிக் டைம்ஸ்'

தகவல்: லதா.

# 'குருபெயர்ச்சி!'

"எக்ஸ்க்யூஸ் மீ சார்ஸ், மிஸ்டர் பி. சோமசுந்தரம்....?"

வார்த்தையை இழுத்து நிறுத்திய அந்த. நேர்த்தியான மனிதரையே எல்லா ஆசிரியர்களும் திரும்பிப் பார்க்க....

"யெஸ்," என்றவாறு எழுந்து, அவருடைய கையைப் பிடித்துக் குலுக்கினார் சோமசுந்தரம்.

வந்தவர் சந்தன நிறத்தில், மீசையில்லாத முகத்தோடு யாரோ ஓர் இந்தி நடிகரைப் போல இருந்தார். தான் தேடி வந்த ஆசிரியரைக் கண்டதும் அவருடைய கண்களில் புது ஒளி புகுந்தது.

சோமசுந்தரம் அவரை அழைத்துக் கொண்டு போய், மற்ற ஆசிரியர்களில் இருந்து விலகி, உட்கார வைத்தார்.

"நீங்க?"

"சார். நான் கோபால்ராஜ். எஞ்சினீயர். என்னோட மகன் உங்க கிளாஸிலே படிக்கிறான். அவன் பெயர் ஜி. செல்வகுமார்!"

இதுவரை இவர்களையே பார்த்தபடி இருந்த ஆசிரியர்கள், ஆள் யார் என்று தெரிந்து விட்ட நிலையில் பழையபடி திருப்பித் தங்கள் போக்கில் பேச ஆரம்பித்தார்கள்.

மதிய இடைவேளை. வெளியே பள்ளிப் பிள்ளைகள் சாப்பிட்டு முடித்த கையோடு, மைதானத்தில் குதித்துக் கொண்டிருந்தார்கள். சிலர் இன்னும் கூட மரத்தின் அடியில் சாப்பிட்டபடி இருந்தார்கள்.

சோமசுந்தரம் கண்களை மெதுவாக மூடி, மனக் கண்ணில் அந்த ஜி. செல்வகுமாரைத் தேடினார்.

பையன் சீக்கிரமாகவே அவர் கண்களில் அகப்பட, "ஓ!" என்றபடி புன்னகை செய்தார்.

கோபால் ராஜ் பேசினார்.

"சாரி ஃபார் த டிஸ்டர்பன்ஸ் சார். என் பையன் நல்லாப் படிக்கணும். அதனால் தான் உங்க உதவியைத் தேடி வந்திருக்கேன்!"

"நோ...நோ.. இதில் என்ன டிஸ்டர்பன்ஸ்? சொல்லப் போனால் இது பெரிய உதவி! நீங்க வந்ததில் எனக்கு சந்தோஷம்!"

கோபால்ராஜ் முகம் மலர்ந்தார்.

"பையன் எப்படி சார், இருக்கான்?"

"ரொம்ப அமைதியான பையன். வகுப்பில் இருக்கிற இடம் தெரியாது. ஆனால், ரெண்டு சப்ஜெக்ட்லே ஃபெயில்!"

கோபால்ராஜ் ஆசிரியருடைய நினைவுச் சக்தியைத் தன் மனசுக்குள் பாராட்டிய படியே பேசினார்.

"ரைட் சார். ஆனால் பாஸ் பண்ணின சப்ஜெக்ட்லே கூட மார்க் கொஞ்சம் தான். அது போதாது!"

"உண்மை தான்!"

"சார், நான் ஓர் எஞ்ஜினீயர். படிக்கிற காலத்தில் நான் தான் கிளாஸ்லே முதல் மாணவன். நன்றாகப் படிப்பேன். கல்லூரியில் சர்வகலா சாலை முதல் ராங்க். தங்கப் பதக்கம் வாங்கியிருக்கிறேன்!"

"தட்ஸ் வெரி நைஸ்!" என்றவாறே சிரித்தார் சோமசுந்தரம்.

கோபால்ராஜ் தொடர்ந்தார். "என் மனைவி கூட முதல் மாணவியாக வந்தவள் சார். நல்ல புத்திசாலி. எங்கள் மகன் இப்படி இருக்கக் கூடாது. இல்லையா.....?"



மலர்வண்ணன்

''சொல்லுங்க!''

''நீங்க அவனுடைய கிளாஸ் டீச்சர். கணக்கு ஆசிரியரும் கூட. அதனால் நீங்க மனசு வைத்து, என் மகனைப் படிக்க வைக்கணும்!''

சோமசுந்தரம் புன்னகை மாறாமலேயே, ''சரி சார். நான் அவனைக் கொஞ்சம் கவனிக்கிறேன்!'' என்றார்.

''சார், ஓர் ஆசிரியர் தெய்வத்துக்குச் சமம். ஆசிரியர் நினைத்தால் களிமண்ணைக் கூடத் தங்கம் ஆக்கலாம். எனக்கு இருப்பது ஒரே மகன். அவனை நீங்க தான் உருவாக்க வேண்டும்.''

இந்த வார்த்தைகளைக் கேட்டுச் சோமசுந்தரம் புல்லரித்துப் போனார்.

''நீங்கள் கவலைப்படாதீர்கள் சார். அடுத்த பரீட்சையிலே பாருங்க. அப்புறம் வீட்டிலே கொஞ்சம் கண்டிப்பாக இருங்க. நான் நிறைய வீட்டு வேலைகள் தருவேன். பையன் அதையெல்லாம் செய்திட்டு வரணும்.

கோபால்ராஜ் எழுந்து கைகுலுக்கினார்.

''தேங்க் யூ சார், என் பையன் இனிமேல் உங்க பொறுப்பு!''

''என்னால் முடிந்ததைச் செய்கிறேன், சார்!''

கோபால்ராஜ் கம்பீரமாக நடந்து ஆசிரியர் அறையை விட்டு வெளியேறினார்.

செல்வகுமார் தன் வகுப்பு ஆசிரியர் முன் தலை குனிந்து நின்றான். கண்களில் கொஞ்சமாய்க் கண்ணீர்.

''ஏண்டா, அழுறே? உங்க அப்பா, அம்மா வசதியானவர்கள். நல்ல படிப்பாளிகள். அப்படி இருக்கும் போது உனக்கு என்ன ஆச்சு? இனிமேல் நான் உன்னைத் தனியாகக் கவனிக்கப் போகிறேன். மற்ற ஆசிரியர்களிடமும் சொல்லியாச்சு. சொல்கிற வேலையை ஒழுங்காகச் செய்யணும், என்ன?''

செல்வகுமார் தலையை ஆட்டினான்.

''நாளைக்கு என்கிட்டத் தனியாக வந்து ஆங்கிலச் செய்யுள்களை ஒப்பிக்கணும். பத்துக் கணக்குத் தருகிறேன். போட்டுட்டு வரணும் புரியுதா?''

''சரி சார்!''

மறுநாள் செல்வகுமார் தப்புத் தப்பாகக் கணக்கைப் போட்டுக் கொண்டு வந்திருந்தான். மனப்பாடமும் சரியில்லை.

பள்ளி முடிந்த பின் இரண்டு மணிநேரம் சோமசுந்தரம் அவனைத் தனியாக உட்கார வைத்து அடிப்படையில் இருந்து சொல்லிக் கொடுத்தார்.

செல்வகுமார் மெதுவாகக் கற்றுக் கொண்டான். ஒவ்வொன்றையும் பலமுறை சொல்லித் தர வேண்டியிருந்தது. சோமசுந்தரம் சற்றும் அலுக்காமல் சொல்லிக் கொடுத்தார்.

கோபால்ராஜ் பணிவோடு கூறிய அந்த வார்த்தைகள் அவருடைய காதுகளில் ஒலித்துக் கொண்டே இருந்தன.

'இவனை எப்படியும் ஆளாக்க வேண்






டும்!' என்று கங்கணம் கட்டிக் கொண்டு செயல்பட்டார். தினமும் இரண்டு மணி நேரம் அவனுக்காகப் பாடுபட்டார்.

அடுத்த தேர்வு வந்தது.

செல்வகுமார் எல்லாப் பாடங்களிலும் நிறைய மார்க் வாங்கியிருந்தான். கணக்கில் தொண்ணூறு!

சோமசுந்தரம் புதையல் கிடைத்திருந்தால் கூட அவ்வளவு தூரம் மகிழ்ந்து போயிருக்க மாட்டார்.

**அ**ன்று -

ஒரு திருமணத்திற்குப் போயிருந்த ஆசிரியர் சோம சுந்தரம், அங்கே கோபால்ராஜ் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தார்.

அவரை நோக்கி நடந்தார்.

தன் மகனுக்காகப் பல நாட்கள் உழைத்து அவனை நல்ல மார்க் வாங்கச் செய்த தன்னை அவர் நன்றாக வரவேற்பார் என்று மகிழ்ந்து, அதையே நினைத்துக் கொண்டு போனார்.

கோபால்ராஜ் கால் மேல் கால் போட்டுக் கம்பீரமாக அமர்ந்திருந்தார். பணக்காரத்தனம் தெரிந்தது.

"வணக்கம் சார்!" என்றார் சோம சுந்தரம்.

"வணக்கம்... ஓ... செல்வகுமாரின் ஆசிரியர் இல்லே? ம்.. என்ன சௌக்கியமா?"

குரலில் பெருமை இருந்தது. இவரை உட்காரக் கூட அவர் சொல்லவில்லை.

சோமசுந்தரம் தடுமாறினாலும் சொன்னார்:

"செல்வகுமார் இப்போது நன்றாகப் படிக்கிறான் சார்!"

"ஏன் படிக்க மாட்டான்? எல்லா மார்க்கையும் நான் பார்த்தேன். நானும் சரி, அவன் அம்மாவும் சரி, நல்ல படிப்பாளிகள். புலிக்குப் பிறந்தது பூனையாகுமா?"

சோமசுந்தரம் தடுமாறினார். பிறகு "சார்... உண்மையில் அவன் புத்திசாலி தான்.. என்ன, கொஞ்சம் மெதுவா எதையும் புரிந்து கொள்கிறான்..." என்றார்.

"ஓ. நீங்க பழைய கதையைச் சொல்றீங்களா? மிஸ்டர்.. உங்க பேர் என்ன..? ரைட்... தல்லாகுளம் தாமோதர சாமீன்னு கேள்விப்பட்டிருக்கிறீர்களா, பெரிய ஜோசியர்.! நான் அவரிடம் போயிருந்தேன். கொஞ்ச நாள் நேரம் சரியில்லே. மூணு மாசம் பதினைஞ்சு நாள் கழிச்சுக் குரு வருகிறான். அப்புறம் செல்வகுமார் அட்டகாசமாகப் படிப்பான் என்றார். மனுஷன் பெரிய ஆள் சார். இப்போ பாருங்க, அவர் சொன்ன நேரம் வந்தாச்சு. பையன் கணக்கிலே தொண்ணூறு மார்க் வாங்கித் தூள் பண்ணிட்டான்."

கோபால்ராஜ் பேசிக் கொண்டே போக, சோம சுந்தரம் சிலையாகச் சமைந்து போனார்.

மனசுக்குள் ஒரே சமயத்தில் கோடிக்கணக்கான வண்டுகள் குடைவது போல் இருந்தது.

ராஜாஜி வாழ்க்கை வரலாறு — IV

ராஜ்மோகன் காந்தி

## 15

# சம்வாதத்தில் சாணக்கியன்

பிஸோவின் தலைமையில் நாகர்களின் விடுதலை இயக்கம் ஆரம்பமானதும் அஸ்ஸாம் முதலமைச்சர் விஷ்ணுராம் மேதி, மாவட்டங்களின் நிர்வாகத்தைப் பலப்படுத்த வேண்டும் என்று அபிப்பிராயப்பட்டார். அவருக்கு ஒரு கடிதம் எழுதி, அதன் நகலை அஸ்ஸாம் ஆளுனருக்கும் அனுப்பினார் ஸி. ஆர்:

"மனோதத்துவ ரீதியாகப் பார்க்கும்போது, மலைவாழ் பழங்குடி மக்களை நாம் நல்லபடியாக நடத்துகிறோம் என்ற உணர்ச்சி அவர்களுக்கு ஏற்பட வேண்டும் என்பதே பிரச்னையின் சாரமாக எனக்குத் தோன்றுகிறது. ஆட்சி நடத்துவதில் தங்களுக்கும் ஒரு நிஜமான பங்கு இருக்கிறது என்று அவர்கள் உணர வேண்டும். இந்தப் பழங்குடி மக்களுக்குப் பெருமளவில் பிரதேச சுயாட்சி வழங்குவதற்கு அரசியல் சாசனத்திலேயே வழிவகுக்கப்பட்டுள்ளது. சம்பிரதாயமான தரக் கட்டுப்பாடுகளைத் தளர்த்தி, பெரிய, சிறிய உத்தியோகங்களில் எந்த அளவுக்கு முடியுமோ அவ்வளவுக்கு இந்தப் பழங்குடி மக்களை நியமிப்பது அவசியம் என்றும் எனக்குத் தோன்றுகிறது."

ஸி. ஆருக்குப் பெரும் பலம் அளித்த ஒரு விஷயம் அரசு ஊழியர்கள், அதிகாரிகளின் பூரண ஒத்துழைப்புத்தான். தெற்கே 1937 — 39 இல் அவருக்கு இது கிடைத்தது. இப்போதும் கிட்டியது. இதற்கு ஒரு முக்கிய காரணம், தாம் உள்துறை அமைச்சராக இருப்பதால் தமது நண்பர்களோ உறவினர்களோ ஆதாயம் அடையக் கூடாது என்ற அவரது மனஉறுதிதான். டில்லியில் உயர் பதவியிலிருந்த ஓர் அதிகாரி லஞ்சம் வாங்குவதாக ஒரு கடிதம் வந்தது. அவர் குடும்பத்தை ஸி. ஆர். மிக நெருக்கமாக அறிவார். ஸி. ஆர். ஃபைலில் குறிப்பெழுதினார்.

"இவரது நடவடிக்கைகளை ஸி. ஐ. டி. கவனித்து வர வேண்டும். விசாரணையில் இவர் குற்றவாளி என்பது கண்டுபிடிக்கப்பட்டால் குற்றத்துக்காக வழக்குத் தொடரப்பட வேண்டும். தேவையானால் பதவி நீக்கம் செய்யவும் தயங்க வேண்டாம்."

துப்பறியும் துறை இயக்குனர் முல்லிக் கூறுகிறார்:

"ராஜாஜியிடம் வழவழா விவகாரமே கிடையாது. எந்தக் கேள்விக்கும் நேரடியான, தெளிவான பதில்களை அளிப்பார். எதையும் சந்தேகத்துக்கு இடமாகிற மாதிரி வைக்க மாட்டார். ஒரு தவறு நேர்ந்து விட்டால்.



• எச். வி. ஆர். ஐயங்கார்: குறுக்குக் கேள்விகள்.



• ஷியாம் பிரசாத் முகர்ஜி: சம்வாத சாமர்த்தியம்.

பொறுப்பைத் தட்டிக் கழிக்கவே மாட்டார். பட்டேல் கூட, பிரச்னைகளில் முடிவெடுக்கும்போது, அரசியல் காரணங்களைக் கணக்கெடுத்துக் கொள்வதுண்டு; ராஜாஜியிடம் இது கிடையவே கிடையாது. இந்தப் போக்கு காங்கிரஸ் கட்சிக்குப் பிடிக்கவில்லை. கட்சியாளர்களுக்கு இடையே இருப்பதைவிட அரசு அதிகாரிகளிடையே இருப்பது ராஜாஜிக்கு நிம்மதியளித்தது!''

அதிகாரிகள் தெரியாத்தனமாகத் தவறிழைத்து விட்டால் ஸி. ஆர். அவர்களைக் கேடயம் போல் நின்று காப்பாற்றுவார். அதிகாரிகளைக் குறுக்குக் கேள்விகள் கேட்டுக் குடைந்தெடுப்பதும் உண்டு. எச். வி. ஆர். ஐயங்கார் நினைவு கூர்கிறார்: "அஸ்ஸாமில் பணியாற்றிய ஒரு வங்கப் போலீஸ் அதிகாரி மீது நன்னடத்தைக்குறைவுக்காக நடவடிக்கை எடுக்கப்பட்டிருந்தது. இந்த விஷயத்தில் இறுதி முடிவுக்காக ஸி. ஆரிடம் ஃபைலைக் கொண்டு சென்றிருந்தேன். குறிப்பிட்ட போலீஸ் அதிகாரி மீது சுமத்தப்பட்டுள்ள குற்றச்சாட்டுக்களுக்குப் பதிலளிக்க அவருக்கு நியாயமான வாய்ப்புத் தரப்பட்டு விட்டதாக நான் கருதினேன். அவ்வாறே ஸி. ஆரிடம் கூறவும் செய்தேன். வழக்கமான பல பிரச்னைகள் போல் இதுவும் ஒன்று; இரண்டு நிமிஷங்களில் விஷயத்தை முடித்து என்னை ஸி. ஆர். அனுப்பி விடுவார் என்றுதான் எண்ணினேன். ஆனால், ஸி. ஆரோ, என்னை ஏகப்பட்ட குறுக்குக் கேள்விகள் கேட்டுக் கசக்கிப் பிழிந்துவிட்டார்!

'விசாரணையை நடத்திய அதிகாரி நியாய உள்ளம் படைத்தவர் என்பது உனக்கு எப்படித் தெரியும்? பெரிய அதிகாரிகள் பலர் காலம் செல்லச் செல்ல, சொந்த விருப்பு வெறுப்புகளுக்கு ஆளாகக் கூடும் என்பது உனக்குத் தெரியுமா? அஸ்ஸாமில், அஸ்ஸாமிய அதிகாரிகளுக்கும் வங்க அதிகாரிகளுக்கும் இடையே நிலவும் பனிப் போர் பற்றி நீ அறிவாயா?' என்றெல்லாம் என்னை வறுத்தெடுத்து விட்டார்! கடைசியில் ஃபைலில் என்ன எழுதினார் என்று பார்த்தால் எனது சிபாரிசை ஆமோதிப்பதாகத்தான்! ராஜாஜி சொன்னார்: "ஓர் அதிகாரி நம்பிக்கைக்கு உரியவர் அல்ல என்று உறுதியான சாட்சியம் கிடைத்தாலொழியப் பொதுவாக அதிகாரத்தில் உள்ளவர்களை நம்பித்தான் ஆட்சி நடத்த முடியும்.''

ராஜாஜியின் இந்த நிர்வாகப் பாணியை மூல்விக்கும் நிறையவே அனுபவித்திருக்கிறார். அவர் நினைவு கூர்கிறார்:

''ஒரு கோப்பில் இலாகாவின் சிபாரிசுடன் ஒத்துப் போகாத மாதிரி ஸி. ஆர். சில குறிப்புக்களை எழுதியிருப்பதைப் பார்த்தேன். பின்னால் அவரே அதே ஃபைல் தம்மிடம் சில விளக்கங்களோடு திரும்பி வந்த போது, இலாகாவின் சிபாரிசை முழுமையாக ஏற்றுக் கையெழுத்துப் போட்டிருப்பதையும் பார்த்தேன்! 'இப்போது எப்படி ஒப்புக் கொண்டீர்கள்?' என்று கேட்டேன். 'அறிவுபூர்வமான விவாதங்கள் நடத்துவதில் எனக்கு ஆசை என்று எண்ணுகிறாயா?' என்று ராஜாஜி கேட்டு விட்டுத் தொடர்ந்தார்: 'இருக்கலாம்; ஆனால் அது மட்டும் காரணம் அல்ல. நீங்கள் எல்லோரும் பிரச்னையின் ஒரு பக்கத்தை மட்டும் பார்த்து ஃபைல் தயாரித்திருந்தீர்கள். நான் மறுபக்கத்தையும் பார்த்துக் குறிப்புக்கள் எழுதினேன். இரு தரப்பையும் எடை போட்டுப் பார்த்த பிறகு உங்கள் சிபாரிசே சரியானது என்ற முடிவுக்கு வந்தேன். இதில் முரண்பாடு என்ன? இரு தரப்பு வாதங்களையும் பிரயோகித்து, உரைத்துப் பார்ப்பது என் சுபாவமாகி விட்டது.'

இத்தகைய ஒரு சுபாவத்தின் பின்னணி என்ன? அறிவுபூர்வமான வாதப்பிரதிவாதம் அளித்த இன்பம் ஒருபுறமிருக்க, நடுநிலை தவறாது நடந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வமும், மனிதர்கள் நல்லது கெட்டதை எடை போடும்போது தவறுகள் நேர்வது இயல்பு, எனவே, அதிகாரிகளின் சிபாரிசுகள் நன்கு ஆராயப்பட வேண்டும் என்ற கருத்தும் இரு முக்கிய காரணங்கள்.

அரசியல்வாதிகள் ஸி. ஆரைக் காண வருவதைக் குறைத்துக் கொண்டனர். மாநில அமைச்சரவையில் மாற்றங்களை ஏற்படுத்த வேண்டும் என்ற கருத்துடன் தம்மை அணுகுகிறவர்கள் 'ரொம்ப 'போர்' அடிப்பதாக ஸி. ஆர். வெளிப்படையாகவே காட்டிக் கொண்டார். 'ராஜாஜி விசுவாசிகள்' என்று அவரைச் சுற்றி அணிசேரத் தயாராக வந்தவர்களும் உண்டு. இவர்களையும் ஸி. ஆர். தவிர்த்தார். இதனாலெல்லாம் அவரது இல்லமான நெ. 1, யார்க் பிளேஸின் புல் தரையும் வராந்தாக்களும் சிபாரிசு தேடி வரும் அரசியல்வாதிகள் யாருமின்றி வெறிச்சோடிக் கிடந்தன. இதுபற்றி



• விஷ்ணுராம் மேதி: முதல்வருக்கு அறிவுரை.

ஸி. ஆர். கவலைப்படவில்லை. மாறாக, விரும்பி வரவேற்கவே செய்தார். இதனால் தானேமாலைநேரங்களையும்உள்துறைஅமைச்சின் கோப்புகளைப் பார்க்க அவரால் செலவிட முடிந்தது!

நாடாளுமன்றத்தின் மேல் சபைக்குச் சென்னை சட்டசபையின் ஏகமனதானவோட்டளிப்பைப் பெற்றுத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார் ராஜாஜி. நாடாளுமன்றத்தில் அவர் பேசி, நடந்து கொண்ட விதம், வயது காரணமாகவோ, அல்லது பிரிட்டிஷ் அரசின் சிறைச் சாலைகளில் அவ்வப்போது விருந்தினராகத் தங்கியிருந்ததாலோ அவரது புத்திக் கூர்மை சற்றும் பாதிக்கப்படவில்லை என்பதை எடுத்துக் காட்டியது. உள்துறை அமைச்சர் என்ற விதத்தில் அவர் பல கசப்பான காரியங்களைச் செய்ய வேண்டியிருந்தது. பஞ்சாபில் ஜனாதிபதி ஆட்சியைக் கொண்டு வருவது, பத்திரிகைச் சட்டத்தை நிறைவேற்றுவது, அரசியல் சாசனத் திருத்தத்தைச் செய்வது, தடுப்புக் காவல் சட்டத்தின் ஆயுளை நீடிப்பது போன்ற பல. ஆயினும் இவற்றின் பளுவால் அவர் தடுமாறவில்லை. வாக்குச் சாதுர்யத்தால் ஒவ்வொரு முறையும் நாடாளுமன்றத்தின் பேராதரவைப் பெற்றார். கடைசி வரை அவரை எதிர்த்தவர்கள் கூட, அவரது ஆற்றலை ஒப்புக் கொண்டு பாராட்டினர்.

நாடாளுமன்றத்தில் உறுப்பினர்களின் குறுக்கீடுகளைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்வதில் ஸி. ஆர். அபார சாமர்த்தியம் காண்பித்தார். ஒரு முறை சியாம் பிரசாத் முகர்ஜி எழுந்து ராஜாஜியின் வாதத்தில் குறுக்கிட்டு, "நீங்கள் இப்போது ஒரு வழக்கறிஞர் இல்லை, அமைச்சர் என்பதை மறவாதீர்கள்" என்றார். உடனே, "நான் வழக்கறிஞர் தொழிலைத் துறந்த கையோடு நியாய உணர்வையும் துறந்து விடவில்லை" என்றார் ஸி. ஆர்.

நேற்று வரை சுதேச சமஸ்தானங்களாக விளங்கி, இன்று இந்தியாவுடன் இணைந்திருந்த பல ராஜ்யங்கள், இன்னமும் மாநிலத்தின் ஒரு பகுதியாகாமல் மத்திய அரசின் நேரடி மேற்பார்வையில் இயங்கி வந்தன. அத்தகைய ராஜ்யங்களின் பட்ஜெட் பற்றாக்குறை மிக அதிகமாக இருப்பதையும் நிர்வாக ஆற்றல் குறைவாக இருப்பதையும் ஸி. ஆர். எடுத்துக் காட்டினார். அப்போது போபாலைச் சேர்ந்த தாக்குர் லால் சிங், "நீங்கள் அவற்றை நசுக்குவதுதான் 'காரணம்.'" என்றார். வினாடி கூடத் தாமதியாமல் ஸி. ஆர்., "இல்லை நண்பரே, அவற்றை மத்திய அரசு மடியில் வைத்துக் கொண்டு கொஞ்சுவதுதான் காரணம்" என்று ஒரு போடு போட்டார்!

இம்மாதிரியான சொற்பிரயோகங்கள் ராஜாஜிக்குச் 'சாணக்கியன்' என்ற பெயரைப் பெற்றுத் தந்தன. இந்தப் பெயரையொட்டியே ஒரு ரசமான விவாதமும் நடந்தது!

(தொடரும்)



## அருள்வாக்கு

ஆத்மாவுக்கு வந்திருக்கிற வியாதி தீருவதற்கு வைத்தியம் செய்வதுதான் மதம். ஒரு நோயாளிக்கு இன்ன வியாதி வந்திருக்கிறது. அது இன்ன மருந்தைத் தந்தால் சொஸ்தமாகும் என்பது வைத்தியனுக்குத்தான் தெரியும். தங்களுக்கென்று ஒரு பொருளையும் தேடிக் கொள்ளாமல் பரம தியாகத்துடன் லோகக்ஷேமத்தையே நினைத்த ரிஷிகள் — தர்ம சாஸ்திரக்காரர்கள் — அப்படித் தந்திருக்கிற மருந்துதான் நமது சநாதன தர்மம். மற்ற தேசங்களில் வேறு வைத்தியர்கள் வேறு மதங்களை மருந்தாகத் தந்திருக்கிறார்கள். நம் உடம்புக்கு மருந்து தருகிற டாக்டரிடம், 'அந்த டாக்டர் அப்படி ட்ரீட்மெண்ட் செய்கிறார், நீங்கள் இப்படிச் செய்கிறீர்களே' என்றால் அவர் கேட்டுக் கொண்டிருப்பாரா? வைத்திய சாஸ்திரத்தில் பல தினுசுகள் உண்டு. ஒன்றில் கடும் பத்தியம் இருக்கும். ஒன்று லகுவாக இருக்கும். ஒன்றில் மருந்து கசக்கும். இன்னொன்றில் தித்திக்கும். இதையெல்லாம் ஒன்றாக்க வேண்டும் என்று சொல்லாமல் அவரவரும் எந்த வைத்திய முறையை மேற்கொள்கிறார்களோ அதையே விடாமல் பின்பற்றினால், எந்த முறையிலும் சொஸ்தம் அடையலாம்.

மற்ற மதங்களில் சகல பிராணிகளுக்கும் அவசியமான பொது தர்மங்களைச் சொல்லியிருக்கிறது. அவற்றை நம் வைதிக மதமும் ஸாமான்ய தர்மங்கள் என்ற பெயரில் சர்வ ஜனங்களுக்கும் விதித்திருக்கிறது. அஹிம்சை, சத்தியம், தூய்மை, புலனடக்கம், தேவைக்கு அதிகமாக ஒரு துரும்பைக் கூடத் தனக்கென வைத்துக் கொள்ளாமலிருப்பது, தெய்வ பக்தி, மாதா பிதாவிடம் விசுவாசம், சகல ஜீவராசிகளிடத்திலும் சமமான அன்பு—இவை எல்லாம் எல்லாருக்கும் நம் மதத்தில் விதிக்கப்பட்ட ஸாமான்ய தர்மங்கள்.

பலவிதமான ஜீவர்களின் பலவிதமானப் பக்குவநிலைகளைப் பொறுத்துப் பகவான் அவர்களை வேறு வேறு மதங்களில் பிறக்கும்படி செய்கிறான். அந்தந்த மதத்தைப் பற்றி ஒழுகியே அவரவரும் ஆத்ம க்ஷேமம் அடைய முடியும் என்பதே என் நம்பிக்கை.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

# மாடு

மாட்டுப் பட்டியையே கலைத்து விடுவது என்று தான் விஷயம் காதில் விழுந்த முதல் கணத்தில் வேலாயுதம் பொங்கினான்.

மூன்றாவது முறையாகக் காரிக்காளை அவனுடைய அப்பா பொன்னுசாமியை முட்டித் தள்ளிவிட்டதாம்.

வகுப்பில் பாடம் நடத்திக் கொண்டிருக்கும் போது சைக்கிள் மிதித்து வந்த மூச்சிரைப்பும் வியர்வையுமாக, பக்கத்துக் கொல்லை ராமன் வந்து சொன்னான்.

"வாத்தியாரே! அண்ணனை மாடு முட்டித் தள்ளிடுச்சி"

பாடம், வகுப்பு, பள்ளிக் கூடம் என்று எல்லாம் திடீரென்று மின்சாரம் துண்டித்து இருட்டு வியாபித்த மாதிரி ஒரு பொறி கலக்கம்.

"எந்த மாடு?" அதுவாகத்தான் இருக்கும் என்று யூகித்து ஊர்ஜிதப்படுத்துகிற மாதிரி கேட்டான் வேலாயுதம்.

"காரிக் காளை"

அதுவே தான்.

அதற்குள் சக ஆசிரியர்கள், சிப்பந்திகள் என்று ஒரு சிறு கூட்டம் சுற்றிவிட்டது. கிராமம் எவனுக்கு எது நடந்தால் என்னவென்று இன்னும் அத்தனை பாராமுகமாகி விடவில்லை.

"இந்த வயசிலே இவருக்கு எதுக்கு இந்தத் தொல்லை? இவர் எதுக்கு மாடு மேய்க்கணும்?"

வாய்க்கு வாய், கள்ளி நெருப்பு மஞ்சம்புல் புதரில் விழுந்து தொற்றித் தொற்றிப் பற்றுகிற மாதிரி இதே கேள்வி.

நெருப்பு மாதிரிதான் வேலாயுதத்தைக் கேள்விகள் சுட்டன. மேய்ச்சலுக்குக் கிடைக்கிற ஆள் தக்கி நிலைக்காதது பற்றி. கட்டி மேய்க்க முடியாத மாட்டுப் பட்டியைப் பற்றி. ஏற்கெனவே கால் உடைந்து கம்பை ஊன்றி எழுபத்தைந்து வயசில் மாடுகளை அவன் தந்தை மேய்த்து உழல்வது பற்றி. அதில் கிடைக்கும் வருமானத்தை விட மேலாக, முதுமை முட்டித் தள்ளும் செயலின்மை என்ற குழிப் பள்ளத்தை விட்டு மேலெழுந்து நிற்க முயலும் அவர் முனைப்பு பற்றி.

கடைசி கடைசியாகக் காரிக்காளை பற்றி— மூன்றாவது முறை அதுவே தான் முட்டியிருக்கிறது.

முதல் முறை கொம்பு பாய்ந்து பேட்டைக்கு டிராக்டரில் அவரைப் போட்டுக் கொண்டு போய், ஈரத் துணி சுற்றியும் நிற்காத ரத்தக் குட்டையிலிருந்து தூக்கி, டாக்டர் அப்துல்லா தையல் போட்டார்.

அதற்கு முந்தி பொன்னுசாமி கொம்பு தாங்கி நடக்கவில்லை. கண்ணும் பல்லும் போலவே காலும் கையும் உறுதி தான். ஒண்டியாக ஆறு ஏக்கரில் இரண்டு கிணறு வெட்டிப் பார்த்த உடம்பு. விடிவதற்கு முன் ஏர் கட்டினால் உச்சி வெயில் வரை உழுகிற உறுதியுள்ளது.

அப்புறம் கோல் ஊன்றினார்.



இரண்டாவது முறை கழனித் தண்ணீர் காட்டும் போது மோதி முதுகெலும்பில் அடி. சிக்கனு குப்பத்தார் வந்து முட்டைப் பற்று போட்டு, இரண்டு வாரங்களில் கயிற்றுக் கட்டிலிலிருந்து அவரை எழுப்பி உட்கார வைத்து விட்டார். முதுகு கொஞ்சம் கூன் போட்டு விட்டது.

காரிக் காளையின் மீது வேலாயுதத்துக்கு கண் மண் தெரியாத கோபம் வந்தது. புளியங் கட்டையை எடுத்து அதன் முதுகு முறிய அடிக்க வேண்டுமென்ற வெறி. ஆனால் செய்யவில்லை. வேலாயுதத்தால் முடியாது; அவனால் மட்டுமல்ல அவன் தந்தை பொன்னுசாமியாலும் முடியாது.

அடி வாங்கித் திருப்பி அடித்தால்தான் சாந்தி என்ற மனசு இருவருக்குமில்லை. வாங்கிக் கொள்வார்கள். பொறுமுவார்கள். புகைவார்கள். மலைக்குன்றின் மேகமும் காற்றும் மூங்கில் தோப்பின் குருவி இரைச்சலும் கிளிக் கூட்டமும் எல்லாவற்றையும் ஆற்றிவிடும். ஆறி ஆறிப் பக்குவப்பட்ட மனசுகள்.

முதல் கிணறு வெட்டும் போது காரிக்கு நாலு வயசு. முன்பு ஒரு செவலை இருந்தது. அதுவும் இதுவும் தான் நுகத்தில் கிணற்றின் பாறை நொறுக்கிய போது மலை மலையாகக் கல் இழுத்தன. செவலை இரண்டாவது கிணறு வெட்டும் போது இருக்கவில்லை. கோமாரியில் போய் விட்டது.

ஒரு கிணறு பொய்த்தால் மறு கிணற்றைத் திறந்து பார்க்க வேண்டிய வானம் பார்த்த விவசாயம். காரிக்குப் பதினாறு நடக்கும் போதுதான் இரண்டாவது கிணறு வெட்டக் கங்கை பூஜை போட்டது.

இதுவும் ஆரம்பத்தில் பாறை தான். நொரம்புப் பாறை. வெட்டுக்கு மசிந்து கொடுத்தது. காரியோடு ஒரு பில்லையெருது இப்போது கல் இழுத்தது. கிணற்றில் தண்ணீர் விழுந்து, குதூகலத்தில் அவன் காரியைத் தட்டிக் கொடுத்த போது உடல் சிலிர்த்தது போல் காரிக்குத் தோல் துடித்தது.

முரட்டுக் காளை தான் காரி. முன்பு காட்டுக்கு மாடு மேய்க்கப் போன உத்தண்டி, பொழுது போக்காக அதற்கு முட்டக் கற்றுத் தந்து பழக்கிவிட்டிருந்தான். ஆட்கள்கிட்ட வந்தாலே புஸ்ஸென்று சீறி, வந்தவன் விலகி ஓடுவதை மூக்கை விடைத்து வேடிக்கை பார்க்கும்.

"அதை வித்துத் தொலைச்சடணும்!" வேலாயுதத்தின் மனைவி வத்சலா அவனையும் மாமனாரையும் தார்க்குச்சி போட்டுக் கொண்டே தான் இருந்தாள்.

ஒரு தடவை அவள் பம்ப் ஷெட்டில் சேலையை விரித்துக் காயப் போட்டுத் திரும்பும் போது முட்ட வந்து, அவளைக் கழனியிலும், கொல்லையிலும் இறங்கி ஓட வைத்திருந்தது.

பொன்னுசாமியைக் கொம்பில் தாக்கிய மறு வருஷம் நடந்தது அது. காலில் விழுந்த அன்றுதான் முதல் தடவையாகப் புளிய மிளாறில் நாலைந்து அடி காரியை அடித்து விட்டார் பொன்னுசாமி.

அன்று இரவு அவர் சரியாகச் சாப்பிட



வில்லை. நடுநிசியில் ஒரு தரமும் பின்னேரத்தில் ஒரு தரமும் கயிற்றுக் கட்டிலில் வெளியே அவர் இருமிக் கொண்டு உட்கார்ந்திருக்கும் ஒலி கேட்டது. படுத்தவுடன் தூங்கிவிடுபவர் அவர். அன்று தூங்கவில்லை. மனசு கெட்டிருக்கிறது. வேலாயுதம் புரிந்து கொண்டான்.

காரியை மட்டும் தனித்துப் பிரித்து விற்க முடியாது. மாட்டுப் பட்டியையே தலைமுழுகி விட வேண்டும்.

யாரோ சைக்கிளைத் தள்ளிக் கொண்டு வந்தார்கள். பியூன் ஏறி மிதிக்க, வேலாயுதம் பின் ஸீட்டில் அமர்ந்து போனான்.

காரி முனையில் கட்டிய கயிற்றோடு ஒரு பாவமும் அறியாதது போல் சோளத் தட்டையை மென்று கொண்டிருந்தது.

சைக்கிளில் வந்திறங்கிய வேலாயுதத்தை நிமிர்ந்து பார்த்தது.

பொன்னுசாமியைத் தெரு நடை அறையில் பெஞ்சின் மீது போட்டிருந்தார்கள். கையைப் பிசைந்து பல்லைக் கடித்து அவர் குழந்தை மாதிரி அரற்றிக் கொண்டிருந்தார்.

பார்க்கிறபோதே காரிக்காளை மார்புக்குள் இதயத்தில் வந்து முட்டிய மாதிரி நெஞ்சு துளும்பித் தொண்டை அடைத்தது.

தந்தையின் வேதனையை வேலாயுதத்தால் தாங்க முடிந்ததில்லை. வயசு மூத்து, நல்லதிலும் கெட்டதிலும் மனம் உழன்று சலித்து.

---

**வையவன்**

மரத்துப் போயிருந்தாலும் உயிரின் ஆதார கலசங்கள் ஓரிரு இடங்களில் ஆடி அதிர்ந்து விடுகின்றன.

"வெலகு, வெலகி நின்னு வழி விடுங்க" என்று குப்பாண்டிக் கோனார் வேலாயுதம் வருகைக்கு அர்த்த முக்கியத்துவம் கொடுத்தார்.

"யாரு?" கண் திறந்தார் பொன்னுசாமி.

வேலாயுதத்தின் கண்ணில் முட்டி நின்ற நீர் அவரை உதட்டைக் கடிக்க வைத்தது.

"எப்படி?" என்று சொல் கிடைக்காமல் நிறுத்தினார் வேலாயுதம்.

கோனார் முந்திக் கொண்டார்.

"மாட்டுக்குப் புல்லு போடப் போயிருக்காரு. கீளே என்னமோ பூச்சி ஊர்ந்து போகிற மாதிரி இருக்கவே குனிஞ்சிருக்காரு. என்னமோ பண்ண வர்முருன்னு முட்டித் தள்ளியிருக்கு. இடுப்பு மூட்டு தான் வெலகியிருக்கணும்."

"சிக்கண குப்பத்தாருக்கு ஆள் அனுப்பிச்சீங்களா?"

"அப்பவே சொக்கன் சைக்கிள்ள போய்ட்டான். இந்நேரம் பாதி வழி வந்திருப்பாங்க"

"வித்துருங்க வித்துருங்கன்னு தலைப்பாடா அடிச்சுக்கிட்டேன்" என்று ஈரத் துணியைஎடுத்துக்கொண்டுவர வரச்சொன்னாள் வத்சலா.

"நாம சொன்னுக் கேக்க மாட்டாரு" என்று தொண்டையடைப்பை மீறிக் குரல் கரகரக்கச் சொன்னான் வேலாயுதம். குரலில் கொஞ்சம் உஷ்ணம். தந்தையும் மகனும் பேசிக் கொள்ளும் அளவை மீறிய உஷ்ணம்.

வலியில் துடித்துக் கொண்டிருந்த பொன்னுசாமி, நரைத்த மீசை நெளிய உதட்டைக் கடித்திருந்தவர், இமைகள் கூட நரைத்திருந்த கண்களைத் திறந்து வேலாயுதமா பேசுகிறான் என்பது போல் ஒரு பார்வை பார்த்தார்.

சுடு சொல்லுக்குப் பழக்கப்படாத அந்தப் பார்வையின் மருட்சி, அதன் திகைப்பு, அந்தத் தள்ளாமையின் தனி மூலேக்குத் தள்ளப்பட்ட நிராதரவு எல்லாம் வேலாயுதத்தைச் சுட்டன. அவன் வாயடைத்துப் போனான்.

சிக்கண குப்பத்தார் பத்து நிமிஷங்களில் வந்து கட்டுப் போட்டார்.

"இடுப்பு மூட்டு வெலகியிருக்கு! எளுந்திருக்க ரெண்டு மாசம் ஆவும். வாரத்துக்கு ஒருக்கா வந்து கட்டு போடறேன். அசங்க வேணாம். ஜலவாதிக்குப் போகணும்னு ரெண்டு பேரு அலாக்கா தூக்கிட்டுப் போய்க் குந்த வெக்கணும். இடுப்பு எலும்பு மூச்சிலே பட்டிருக்கு. உஷாரா வச்சிருக்கணும்"

கட்டு போட்டுவிட்டுச் சிக்கண குப்பத்தார் போய் விட்டார்.

வேலாயுதம் நடையில் வந்து நின்று காரிக் காளையைப் பார்த்தான். அதற்கு வலக் கண்ணில் ஒரு சுருக்கமுண்டு. சகல விஷமமும் சகல வன்மமும் அங்கே தான் குடிகொண்டிருப்பது போன்ற சுருக்கம். அடிக்கடி அது அந்தக் கண்ணைச் சிமிட்டிக் கொள்ளும்.

அந்தக் கண்ணில் காரி அவனைப் பார்த்தது.

மாட்டுக்கும் மனிதனுக்கும் நடக்கும் பொறுமை என்னும் பந்தயத்தில் இன்னொரு துணிச்சலான பாய்ச்சல் பாய்ந்தது போல் பார்த்தது.

இதைத் தொலைத்து விட வேண்டும் என்று முடிவு கட்டினான் வேலாயுதம்.

அன்று இரவு சாப்பிட்டுப் படுத்தவுடனே உடம்பும் மனசும் பட்ட அலைச்சலில் தூக்கம் சொருகிச் சாய்த்து விட்டது.

"வேலாயுதம்! வேலாயுதம்!"

நடுநிசி இருக்கும். சட்டையைப் பிடித்து உலுக்கி எழுப்பியது போல் பொன்னுசாமியின் குரல் கேட்டது.

பட்டென்று விழித்தான்.

"வேலாயுதம்!" அவர் தான்.

அவன் எழுந்தான்.

"என்னப்பா?"

"காரிக்குக் குளுத்தி காட்டியாச்சா?"

திவ்வென்று ஆத்திரம் ஏறி அவன் மண்டையில் தாக்கிற்று. எல்லாத்தையும் தொலைச்சுத் தலை முழுகப் போறேன் என்று கத்தலாம் போலிருந்தது. வேலாயுதம் விழுங்கிக் கொண்டான்.

அடிபட்ட நிலையில் பெஞ்சில் சாய்ந்து அவன் சொன்ன ஒரு சொல் உஷ்ணத்துக்கு அவர் பார்த்த பார்வை மாடத்துக்குள் விளக்கு வைத்த மாதிரி நினைவிருந்தது.

"இல்லே!"

"காட்டிடக் கூடாது! காத்தால பாயறதுக்கு முன்னாடி காட்டின குளுத்தி"

"வலி எப்படி இருக்கு?" என்று அவர் பேச்சை மாற்றுவது போல் கேட்டான் வேலாயுதம்.

"இம்சையாத்தான் இருக்கு"

"ஒண்ணுக்குப் போவணுமா?"

"வேணாம். தண்ணியே குடிக்கலே."

பிறருக்குத் தொல்லை தர வேண்டாம் என்று அப்பா தண்ணீரையே தவிர்த்திருக்கிறார். மாங்கொட்டையை வண்டு மாதிரி உள்ளே எதுவோ குடைந்தது.

"தண்ணி கொண்டாரவா?"

"வேணாம். காரிக்குக் குளுத்தி காட்டிடு."

வேலாயுதம் எழுந்தான். அவர் சொல்வதைக் காதில் வாங்காது கண்ணயர்ந்தால் மறுபடியும் அரை மணி நேரம் கழித்து எழுப்புவார்.

வைக்கோல் போர் அருகே முளைக் கயிற்றில், முன் பனியில் குற்றவாளி போல் காரி படுத்திருந்தது. வேலாயுதம் காலடியோசை கேட்டுச் சடக்கென்று கால்கள் ஊன்றி எழுந்தது. புஸ்ஸென்று மூச்சுவிட்டுப் பயமுறுத்திற்று.

"அடி ராஸ்கல்" என்று போர் போட்டிருந்த துவரை மண்டை ஒன்றை உருவி ஒரு வாங்கு வாங்குகிற வெறியில் கையை உயர்த்தினான்.

"சீ அது மாடுடா" என்று வெளி நடையில் கயிற்றுக் கட்டிலில் படுத்திருந்த அப்பா சுத்திய சுத்தல் கேட்டது.

துவரை மண்டையை ஓங்கிய கை நின்று தாழ்ந்தது.

"காரிக்குக் குளுத்தி காட்டிவிட்டு மீண்டும் அதைத் தொழுவத்தில் கட்டித் திரும்பினான்.

அப்பா முனகிக் கொண்டிருந்தார். வலி



அவன்: உன் வீட்டுக்காரருக்கு மூன்று நாளா சாப்பாடு கொண்டு போறியே! எங்கே இருக்கார்?
இவள்: பாமாயில் வாங்கப் போனவருதான். க்யூவிலேதான் நிக்கிறாரு.

— டி. காந்தி.



மலர் என்பார்,
மதி என்பார்,
மயில் என்பார்.
எப்படி
அழைப்பினும்
கண்ணே,
ஈடில்லை எதுவும்
உனக்கு !

யநு
ஸென்ஸேஷன்ஸ்-
ஸாரிகள் மற்றும் டிரெஸ் மெட்டீரியல்ஸ்

மஃபத்லால்
–நம்பிக்கைக்குப் பெயர் பெற்றது




ம∴பத்லால் இண்டஸ்ட்ரீஸ் லிட். (டிரேடு ஷொர்ராக இல்லை) மற்றும் ம∴பத்லால் ∴பைன் ஸ்பின்னிங் & மேன்யு∴பேக்சரிங் கம். லிமிடெட்டின் ரெஜிஸ்டெர்டு ட்ரேட் மார்க்.

Location Courtesy: The Taj Mahal Hotel, Bombay.

MF 635 D TAM

தான். எப்படி வலிக்கும்? அந்த இம்சை என்ன? நெடுநேரம் நின்றான். அவர் வலியை நின்று நின்றே, நினைத்து நினைத்தே குறைத்து விடுபவன் போல் நின்றான்.

"வேலாயுதம்" என்று அவர் கூப்பிட்டார்.

"என்னப்பா?"

"இன்னமே ரெண்டு மாசம் என்னாலே நடக்க முடியாது. நீ இஸ்கோலுக்குப் போயிடுவே. வச்சலா புள்ள குட்டிக்காரி. மாட்டுப் பட்டியை வித்துடலாம்டா."

அப்படி வரட்டும் வழிக்கு.

"என்ன கேட்டுக் கிட்டிருக்கியா?"

"ஊம் ஊம்.. சொல்லுங்க."

"அந்த மாட்டுத்தரகன் மாணிக்கம் முந்தா நாள் கூட வந்து பேசிட்டுப் போனான்."

"அதுக்கு இப்ப என்ன அவசரம்?"

"இல்லே. தண்ணி காட்டி மேய்க்க ஆள் இல்லேன்னு வாயில்லா ஜீவன் வதை பட்டுப் போவும்"

"சரி விடியட்டும்."

"அப்புறம் ஒரு விஷயம்.. காரியை விக்க வாணாம்."

"என்னது?"

"ஆமா.. அதைக் கோனாரு மேச்சுக் கொடுக்கறேன்னு ஒப்புக்கிட்டிருக்காரு."

"அந்தச் சனியனாலே தானே இவ்வளவு உபத்திரவம்!"

ஒரு நிமிஷம் பொன்னுசாமி பேசவில்லை. சூடு ஆற சாவகாசம் கொடுத்த மாதிரி மௌனமாக இருந்தார். இனி அவர் பேசவே மாட்டாரோ என்று நீண்ட மௌனம். ஒரு முறை செருமினார். கனைத்தார். அப்புறம் வாய் திறந்தார்.

"ரெண்டு கெணத்துக் கல் இழுத்திருக்கு. எத்தினியோ சால்... எத்தினியோ புரம்பு.. எமப்பாடு பட்டிருக்குப்பா.. இப்ப வித்தாலும் அடி மாட்டுக்குத் தோல் விலை தர்றாப்லெ வாங்குவான்."

"இன்னிக்கு என்ன நடந்ததுன்னு மறந்தாப்லெ சொல்றே!" என்று எரிச்சலை அடக்கிச் சொன்னான்.

"அட அது மாடுடா. மூர்க்கம் தான். ஒரு நேரத்திலே தான் அப்படி. மூர்க்கம் தெளிஞ்சாப் பசுவண்ணு மாதிரி. அது ஒளைச்ச ஒளைப்புக்கு வெளிலெ போய்க் கசாப்பிலே சிக்கித் தோலுரிய வேண்டாம்பா. நம்மோடேயே இருந்துட்டு நம்மோடயே போகட்டும்."

கண்ணிலிருந்து சொட்டுச் சொட்டாய் இறங்கிய கண்ணீர்த் துளிகள் தரையில் விழுந்து சிற்றொலி எழுப்பின.

"சரி விடியட்டும்!" என்று மூக்கை உறிஞ்சிக் கொண்டு சொல்லிவிட்டுப் படுக்கப் போனான் வேலாயுதம்.

---

# தளபதி திடமதி கல்கி இதழின் ஆஸ்தான ஜோக்கர்!

"கல்கி பத்திரிகையின் ஆஸ்தான ஜோக்கர்" என்று தளபதி திடமதியை வர்ணித்து எழுதியுள்ளார் வாசக அன்பர் ஒருவர். ஆஸ்தான ஜோக்கர், "நான் சொல்றேன் கேளுங்க" என்று ஆரம்பித்துத் தமது அபிப்பிராயத்தை வெளியிடாத அரசியல் — சமுதாயப் பிரச்னையே இல்லை! என்ன சொல்வார் என்பதைத் தான் வாசகர்கள் ஊகித்து கீழே கூப்பனில் எழுதி விலாசத்தைப் பூர்த்தி செய்து அனுப்ப வேண்டும். உறையின் மீது, "தளபதி திடமதி" என்று குறிப்பிடுவது அவசியம். ஒவ்வொரு வாரமும் புதன் கிழமை, அதற்கு முந்தைய தினம் வரை வந்த உறைகள் பிரிக்கப்பட்டு நாலு முதல் ஆறு வரையிலான அறிவுக் கொழுந்தான கருத்துரைகள் உமாபதியின் கார்ட்டூனுடன் பிரசுரமாகும். பிரசுரமாகும் ஒவ்வொரு துணுக்கும் ரூ. 25 பரிசு பெறும். தவிர ஒருவரே எழுதிய துணுக்குகள் அடுத்து வரும் வாரங்களில் பிரசுரத்துக்கு ஏற்கப்பட்டால் ஒவ்வொரு தடவையும் பரிசு இரட்டிப்பாகும். இவ்வாறு ஒரு துணுக்கு அதிகபட்சமாக ரூ. 400 வரை பரிசு பெற வாய்ப்புண்டு. ஆறு மாதங்களுக்குள் அதிகபட்சமான தொகையைப் பெற முயற்சி செய்யுங்கள்.

கூப்பன்:

கல்கி இதழ் 15.11.87 — முடிவு தேதி: 24.11.87.

தளபதி திடமதி: "...........................

...........................

...........................

...........................

...........................

...........................

என் பெயர்: ...........................

விலாசம்: ...........................

...........................



வாசகர் பங்கு:

# சின்னதாக ஒரு சறுக்கல்

ஜனனி




பூவராகன் இன்னும் நான்கு மாதங்களில் வேலையிலிருந்து ஓய்வு பெற வேண்டும். அவர் பணியாற்றுவது தனியார் கம்பெனியில் என்பதால் ஓய்வுப் பணம்—பென்ஷன்—ஏதும் மாதாமாதம் கிடைக்காது. 'கிராசுவிடி' — 'பிராவிடண்ட்பண்டு' என்று வரும் பணமெல்லாம் ஏற்கெனவே வாங்கியிருந்த கடனை அடைக்கவே போதாது.

அவர் ஓய்வு பெறுவதற்கு முன் ஒரே மகன் பாலாஜிக்கு மட்டும் ஒரு வேலை கிடைத்து விட்டால் பெருத்த உதவியாக இருக்கும். மனநிம்மதியுடன் ஓய்வு பெறலாம். பி.எஸ்.ஸி. பாஸ் செய்து விட்டு பாலாஜி எழுதாத பரீட்சை இல்லை; போடாத விண்ணப்பம் இல்லை. போகாத இன்டர்வியூ இல்லை!

ஏதோ காரணத்துக்காக வேலை கிடைக்கவில்லை.

நாளைக்கு அவனை ஓரிடத்தில் பேட்டிக்கு அழைத்திருந்தார்கள். அதை மலை போல் நம்பியிருந்தார் பூவராகன். பேட்டி காணும் மூன்று நபர்களில் ஒருவர் பூவராகன் கூடப் படித்தவர். தன்னுடன் பேட்டி காணும் மற்றவர்களிடமும் சிபாரிசு செய்து, எப்படியும் பாலாஜிக்கு வேலை கிடைக்கச் செய்ய முயற்சி எடுப்பதாகச் சொல்லியிருந்தார். ஆனால்,

உங்கள் பையனுக்கு முன் அனுபவம் இல்லை. அவனை விடப் படித்து அதிகமான முன் அனுபவமோ—தகுதியோ உள்ள வேறு யாராவது விண்ணப்பித்திருந்தால் எங்களால் ஒன்றும் செய்ய முடியாது. நீங்கள் என்னைத் தப்பாக எடுத்துக் கொள்ளக் கூடாது!" என முன்னெச்சரிக்கையாகவும் கூறியிருந்தார்.

அப்படி ஒருவன் வரக்கூடாது என்று பெருமாளைப் பூவராகன் பிரார்த்தித்தார். பெருமாள் என்ன நினைத்தாரோ அப்படி ஒருவனைப் பூவராகன் வீட்டுக்கே அனுப்பி வைத்தார்.

பூவராகனின் கிராமத்தில் அவர் வீட்டுக்குப் பக்கத்து வீடு முராரியுடையது. அவர் பிள்ளை விவேக்தான் பூவராகனைப் பார்க்க வீடு தேடி வந்திருந்தான். மறுநாள் நடக்கவிருந்த இன்டர்வியூவுக்குத்தான் அவனும் வந்திருந்தான்! எம். எஸ்ஸி. முடித்திருந்தான்.

தவிர ஏதேதோ வகுப்புகளில் படித்துத் தேறி, எக்கச்சக்கமான டிப்ளோமாக்களைக் கையில் வைத்துக் கொண்டிருந்தான். "ஸ்போர்ட்ஸ்" யோக்கியதாம்சம் வேறு இருந்தது.

விவேக் ஒரு ஹோட்டலில் அறை எடுத்துத் தங்கியிருந்தான். பேட்டி முடிந்து உடனே ஊர் திரும்புகிறானும். ஆகவே தன் அப்பா சொன்னபடி பூவராகனைப் பார்த்துப் போக வந்திருந்தான். வீட்டில் காய்ந்த

தென்று ஒரு கூடை மாங்காய் வேறு தூக்கி வந்திருந்தான்.

விவேக் — பாலாஜி!

பூவராகனே தேர்வுக் கமிட்டியில் இருந்தாலும், இரண்டு பேரில் விவேக்கைத் தான் தேர்ந்தெடுப்பார்.

வெளியே சிரித்துப் பேசிக் கொண்டிருந்தாலும் பூவராகன் மனம் அலை பாய்ந்தது. இப்போது என்ன செய்வது!.... இந்த விவேக் நாளைக்குக் காலை பேட்டிக்கு வர முடியாமல் செய்ய வேண்டுமே... .

பூவராகன் ஒரு முடிவுக்கு வந்தார்.

விவேக்கைக் கட்டாயப்படுத்தி அன்றிரவு சாப்பிட்டுப் போகும்படி வற்புறுத்தினார். அவன் தங்கியிருந்த ஹோட்டலும் பக்கத்தில் தான் இருந்தது. இரவு பத்து மணிக்கு அவன் புறப்பட்ட போது பூவராகன் தாமே அவனுக்கு ஒரு டம்ளர் பால் எடுத்து வந்தார். தம் சட்டைப் பையில் பொடி செய்து வைத்திருந்த இரண்டு தூக்க மாத்திரைகளை அதில் நன்றாகக் கலந்த பிறகே அவர் பாலைக் கொடுத்தார்.

இது நியாயமா, என அடி மனம் மெல்லிய ஆட்சேபம் கிளப்பியது. இந்த விவேக் வைத்திருக்கும் யோக்யதாம்சங்களுக்கு எங்கேயாவது வேலை நிச்சயம் கிடைக்கும். ஆனால் பாலாஜிக்கு இதை விட்டால் வேறு வழி...?— என்று மனத்தின் இன்னொரு பக்கம் வாதாடியது.

விவேக்குடன் கூடப் போய் அவனை அவன் அறையில் சேர்ப்பித்து மறுநாள் வெற்றி பெற "செயற்கையாக" வாழ்த்து கூறி விட்டு வந்தார்.

மறுநாள் பேட்டி காலை ஒன்பது மணிக்கு. இவன் நிச்சயம் காலை பன்னிரண்டு மணிக்கு முன் எழுந்திருக்கப் போவது இல்லை!

காலையில் பாலாஜி பேட்டிக்குப் புறப்பட்டான். "எல்லாத் தெய்வங்களையும் அவனுக்காக வேண்டினார் பூவராகன். ஆனால் அடி மனத்தில் ஓர் அரிப்பு இருந்தது.

பன்னிரண்டு மணிக்குப் பாலாஜி திரும்பி வந்தான். "பேட்டி எப்படிச் செய்தாய்?" எனக்கூடக் கேட்கவில்லை. "விவேக் வரவில்லையா?" எனக் கேட்டுத் திருப்திப்பட்டுக் கொண்டார். மகனுடைய பாதையில் கிடந்த பெரிய கல்லைப் புரட்டிப் போட்ட நிம்மதி.

மாலை ஆறு மணிக்கு உள்ளே நுழைந்தவன் — விவேக்!

தன் கையில் வாங்கி வைத்திருந்த ஒரு சீப்பு வாழைப் பழத்தைப் பூவராகன் கைகளில் கொடுத்து நமஸ்கரித்தான்.

"மாமா? உங்கள் ஆசிர்வாதம்! எனக்கு இந்த வேலை கிடைத்து விட்டது!"

பூவராகன் முகத்தில் ஈ ஆடவில்லை.

"இன்று காலை என்னையுமறியாமல் நான் தூங்கி விட்டேன் மாமா!.. எழுந்திருக்கும் போதே மணி பன்னிரண்டு. அந்த ஆபீஸில் போன் செய்து கேட்டேன். 'தாமதமானால் பரவாயில்லை.. நீங்கள் பகல் இரண்டு மணிக்கு வந்தால் போதும். வந்திருப்பவர்களை 'ஏ.பி.ஸி.டி.' வரிசைப்படி தான் கூப்பிடுகிறோம். உங்கள் பெயர் விவேக் தானே.. உங்களைக் கூப்பிடப் பிற்பகல் மூன்று மணி ஆகலாம் எனச் சொன்னார்கள்."

பூவராகனுக்குப் பேச்சு எழும்பவில்லை.

"நன்றாகத் தூங்கிவிட்டுப் போனேனா? நல்ல சுறுசுறுப்பாக இருந்தேன்! கேட்டவுடன் 'டக், டக்' எனப் பதில் சொன்னேன். அரை மணி காத்திருக்கச் சொன்னார்கள். நாலரை மணிக்கு வேலை உத்தரவைக்கூடக் கொடுத்து விட்டார்கள்!"

விவேக் உற்சாகமாக எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டான்.

பூவராகன், பெருமாள் படத்தின் முன் கண்களில் நீர் மல்க நின்றார். பிள்ளைக்கு வேலை கிடைக்காத காரணத்துக்காக அல்ல. இத்தனை நாட்கள் கழித்து மனமறிந்து சறுக்கியதற்காக.

பெருமாள் கருணை மூர்த்தி! தயாஸாகரம்! அனாத ரட்சகர்! நிச்சயம் மன்னிப்பார். பாலாஜிக்குச் சீக்கிரம் வேலை கிடைக்கும்!

---



டால்ஸ்டாயிடம் ஓர் இளைஞன் வந்தான். "என்னிடம் எதுவுமில்லை, நீங்கள் தான் உதவி செய்ய வேண்டும்" என்று பலவீனமான குரலில் வேண்டினான்.

டால்ஸ்டாய் உற்று நோக்கினார். "வாலிபனே! நூறு ரூபிள் தருகிறேன்; உன் கை விரல்களில் ஒன்றைக் கொடு" என்றார். இளைஞன் தயங்கி நின்றான். "சரி, ஆயிரம் ரூபிள் தருகிறேன்; உன் கால்களில் ஒன்றைக் கொடேன்" என்றார். இளைஞன் இடித்த புளி போல் நின்றான்.

"பத்தாயிரம் ரூபிள் தருகிறேன்; உன் கண்களிலாவது ஒன்றைக் கொடு" என்று அவர் கேட்டதுதான் தாமதம், இளைஞன் ஆளை விட்டால் போதுமெனக் கிளம்பினான்.

அப்போது டால்ஸ்டாய் சொன்னார்: "இளைஞனே! பார்த்தாயா! உன்னிடமா ஒன்றுமில்லை? உன் உடலில் உள்ள ஒவ்வோர் அங்கமும் விலைமதிப்பற்றது. அந்த மூலதனத்தைப் பயன்படுத்தி முன்னேறு".

— அ. ராஜா ரஹ்மான்.



NAVAJEEVAN BLIND RELIEF CENTRE (Regd)
Jayendra Bhavan, North Mada St., Near Shankar Muth,
P.O. Tirumala. Via Tirupati. Pin-517 504.

# இலவசப் புனிதப் பயணம்!
# திருப்பதி, திருத்தணி மற்றும் காஞ்சிபுரம்!

வேண்டுவோருக்கு வேண்டியதை அளிக்கும் கண்கண்ட தெய்வமான ஸ்ரீ வெங்கடாசலபதி திவ்ய தர்சனமும், ஆறு படை வீடுகளின் முக்கியத் தலமான திருத்தணி முருகனின் தர்சனமும், மங்களத்தை அளிக்கும் மங்கள நாயகியான காஞ்சி காமாட்சியின் அருட்பிரசாதமும், நடமாடும் தெய்வமான ஸ்ரீ காஞ்சி ஆசார்ய ஸ்வாமிகளின் விசேஷ தர்சனமும் ஒருசேர உங்களை அழைக்கிறது. இந்த இலவசப் புனிதப் பயணத் திட்டத்தில் பங்கு கொள்ள உங்களை அன்புடன் அழைக்கின்றோம்.

## சில வேண்டுகோள் மற்றும் விதிமுறைகள்:

திருப்பதியில் இருந்து கடந்த ஒன்பது வருஷங்களாகச் செயல்பட்டு வரும் நவஜீவன் சேவா கேந்திரம் விழியற்றவர்களுக்குப் பல விதங்களிலும் உதவி வருவது குறித்து வாசகர்கள் அறிந்ததே. மேலும் எதிர்காலத்தில் அனாதைப் பெண்கள், குழந்தைகள் மற்றும் முதியோர்களுக்கும் எமது தொண்டுகளை விஸ்தரிக்கத் திட்டம் வகுத்து வருகிறோம். இதன் பொருட்டு திருப்பதி – திருச்சானூர் அருகே ஒரு மாபெரும் இலவச ஹாஸ்டல் பில்டிங் நிர்மாணிக்க முயற்சித்து வருகிறோம். மேற்குறிப்பிட்ட எமது சமூகநலத் திட்டங்களுக்காகவும், கட்டிட நிதிக்காகவும் ரூபாய் 50/– (ஐம்பது ரூபாய் மட்டும்) காணிக்கையாக அனுப்பி இந்தப் புனிதப் பயணத் திட்டத்தில் கலந்து கொள்ள வேண்டுகிறோம்.

## விதிமுறைகள்:

1. உங்கள் காணிக்கையை வரும் 31.12.87 க்குள் அனுப்ப வேண்டும். 2. காணிக்கை 50/– ரூபாயை by M.O. அல்லது D.D. மூலமாக மேற்குறிப்பிட்ட அட்ரஸுக்கு அனுப்ப வேண்டும். M.O. கூப்பனில் உங்களது பெயர் மற்றும் விலாஸத்தைத் தெளிவாக எழுத வேண்டும். 3. காணிக்கை சேர்ந்ததும் குலுக்குச் சீட்டின் நெம்பருடன் உங்களுக்கு உடன் விவரம் தெரிவிக்கப்படும். 4. ஜனவரி 88, புத்தாண்டு தினத்தன்று உங்கள் பெயர் மற்றும் உங்களுக்காகப் பதிவு செய்துள்ள நெம்பருடன் கோயில் ஸன்னிதானம் அருகே குலுக்குச் சீட்டு போட்டு வரிசையாகப் பத்து (Ten members only) அன்பர்கள் தேர்ந்து எடுக்கப்படுவார்கள். 5. தேர்ந்து எடுக்கப்பட்ட ஆஸ்திகர்களுக்கு உடன் விவரம் தெரிவிப்பதுடன், அவர்களின் பெயர்கள் ஜனவரி 2 அல்லது 3 வது வார கல்கியிலும் வெளியிடப்படும். 6. தேர்ந்து எடுக்கப்பட்ட அன்பர்கள் ஜனவரி முதல் மார்ச்சு மாதம் முடிய எப்போது வேண்டுமானாலும் புனிதப் பயணத்தை மேற்கொள்ளலாம். 7. தேர்ந்து எடுக்கப்படாத அன்பர்களுக்கும் விரைவில் ஸ்ரீ வெங்கடாசலபதி தர்சன பாக்கியம் கிடைக்க வேண்டிக் கொண்டு ஜனவரி முதல் தேதியன்று மஹா பிரசாதம் By Post இல் அனுப்பப்படும்.

## சில தொண்டுகள் உங்களுக்காக:

1. உங்கள் சார்பாக ஸ்ரீ வெங்கடாசலபதியின் ஹுண்டியில் சிறு காணிக்கை செலுத்தப்படும். 2. முன் குறிப்பிட்டு விட்டுத் திருப்பதிக்கு யாத்திரையாக வரும் தேர்ந்து எடுக்கப்பட்ட ஆஸ்திகர்களுக்கு ஸ்ரீ வெங்கடாசலபதி தர்சனத்திற்கு ஏற்பாடு செய்யப்படும். 3 திருப்பதி கோயில் ஸன்னிதானம் அருகிலேயே இலவசமாக இடவசதி அளித்து ஸ்ரீ ஸ்வாமி மஹா பிரசாதமும் இலவசமாக வழங்கப்படும். 4. திருத்தணி மற்றும் காஞ்சிபுரம் செல்ல பஸ் – ரயில் சார்ஜு வழங்கப்படும். 5. காஞ்சியில் தங்கவும் காமாட்சி அம்மன் தர்சனத்திற்கும் இலவசமாக ஏற்பாடு செய்து தரப்படும். மேலும் பல சலுகைகள் மற்றும் தொண்டுகளை உங்களுக்காக அளிக்கிறோம்.

"ஓம் நமோ ஸ்ரீ வெங்கடேசாய"

K. R. ஆசார்ய
மானேஜர்

* ஈடன் கார்டன்ஸ் அரங்கம்

## ஒருநாள் கிரிக்கெட்: அற்புதங்கள்; விநோதங்கள்; சாதனைகள்!

இங்கிலாந்துக்கு எதிராக இந்தியா முதன்முதல் ஒருநாள் கிரிக்கெட் பந்தயம் ஆடிய போது, காவஸ்கர் அறுபது ஓவர்களில் முப்பத்தாறு ரன்கள் எடுத்து ஆட்டம் இழக்காமல் பெவிலியனுக்குத் திரும்பினார். ஒருநாள் கிரிக்கெட்டில் நிரம்ப அனுபவம் பெற்றிருந்த இங்கிலாந்து அணியை, அப்போதுதான் ஒருநாள் கிரிக்கெட்டில் அடி எடுத்து வைத்திருந்த இந்தியாவால் வெல்ல முடியவில்லை. "துரிதமாக ஆடி நிறைய ரன்களைக் குவிக்க முயற்சி செய்யாமல் ஏன் இவ்வளவு நிதானமாக ஆடினீர்கள்?" என்று காவஸ்கரிடம் கேட்ட போது, "இங்கிலாந்தின் பிரும்மாண்டமான ரன் குவிப்பை முந்துவது இயலாது என்று தெரிந்தது: அதனால் கொஞ்சம் பாட்டிங் பயிற்சியாவது பெறலாமே என்ற நோக்கத்துடன்தான் அப்படி விளையாடினேன்!" என்று பதில் சொன்னார். இதே காவஸ்கர்தான் இப்போது நடந்து வரும் ரிலையன்ஸ் கோப்பைப் பந்தயத்தில் நியூஜிலாந்துக்கு எதிராக எண்பத்தெட்டுப் பந்துகளில் நூறு ரன்கள் எடுத்து, இறுதி வரை ஆட்டம் இழக்காமல் இருந்தார்! ஒருநாள் கிரிக்கெட்டில் இந்தியா கண்டுள்ள முன்னேற்றத்தையும், இந்திய ஆட்டக்காரர்களின் திறமையும் மனப்பான்மையும் மாறி வருவதையும் இதைவிடச் சிறந்த உதாரணத்தைக் கொண்டு விளக்க முடியாது.

ஒரு நாள் கிரிக்கெட் பந்தயத்தில் ஒவ்வொரு பௌலரும் பத்து ஓவர்களே பந்து

# ஐந்து சிக்ஸர்களும் ஒரு ஹாட்ரிக்கும்!



* சித்து



வீசலாம் என்பதால் குறைந்த பட்சம் நான்கு/ஐந்து பௌலர்களாவது ஓர் அணியில் இருக்க வேண்டும். எனவே இந்த பௌலர்களே பாட்டிங்கும் ஃபீல்டிங்கும் சிறப்பாகச் செய்யக் கூடியவர்களாக இருத்தல் அவசியமாகிறது. அதே சமயத்தில், எதிர் அணி, ரன்களைக் குவிக்காமல் கட்டுப்படுத்த, ஒரு பௌலருக்கு நிறைய அனுபவம் தேவை. இந்த அனுபவம் பெற்றிருக்கக் கூடிய ஆட்டக்காரர் துரிதமாக ஓடக் கூடிய, ஃபீல்டிங் செய்யக் கூடிய, இளைஞராகவும் இருத்தல் அரிதே. எனவே ஒருநாள் பந்தயத்துக்கு அனுபவமும், இளமையும் சரியான விகிதாசாரத்தில் இடம் பெற்றுள்ள ஓர் அணியைத் தயாரிக்க வேண்டும்.

இந்தியாவைப் பொறுத்தவரை, பத்தொன்பது வயதுக்குட்பட்டோர் அணி, இருபத்திரண்டு வயதுக்குட்பட்டோர் அணி என்று சில இளைஞர் அணிகளுக்குச் சர்வதேச கிரிக்கெட் அணிகளுடன் விளையாடும் வாய்ப்பு அவ்வப்போது கிடைத்து வருகிறது. இன்றைய இந்திய அணியில் இடம்பெற்றுள்ள எல். சிவராமகிருஷ்ணன், ரவி சாஸ்திரி, மணீந்தர், ஸ்ரீகாந்த் போன்றோர் இத்தகைய வாய்ப்புகளைப் பெற்றுப் பயனடைந்த இளைஞர்கள்.

இந்தியக் குழு தேர்ந்தெடுப்பில் நிறைய அக்கப்போருக்கு உள்ளானது சேதன் சர்மாவின் தேர்வுதான். கபில்தேவ் அவரைத் 'தூக்கிவிட' முயற்சி செய்வதாகவும், உண்மையில் அவர் 'தகுதியற்றவர்' என்றும் விமர்சனங்கள் எழுந்தன. அதற்கேற்றாற்போல் சர்மாவுக்கு அடிக்கடி உடல் நலக் குறைவு ஏற்பட்டது. இந்திய அணி கபில் தலைமையில் இங்கிலாந்து பயணத்தை மேற்கொண்டு வெற்றியுடன் திரும்பிய போது, அதில் இடம் பெற்றிருந்த சர்மா அவ்வளவாகப் பிரகாசிக்கவில்லை. ரிலையன்ஸ் கோப்பையில் ஆஸ்திரேலியாவுக்கு எதிராக இந்தியா சென்னையில் ஆடிய போது கூட, தமது கையை உடைத்துக் கொண்டு பரிதாபமாக உட்கார்ந்திருந்தார், இந்த வேகப் பந்து வீச்சாளர். ஆனால் நாக்பூரில் நியூஜிலாந்து அணியின் மூன்று ஆட்டக்காரர்களைத் தொடர்ந்து 'கிளீன் போல்ட்' ஆக்கி இவர் 'ஹாட்டிரிக்' எடுத்து ஒருநாள் கிரிக்கெட்டில் உலக சாதனை படைத்த பிறகு, இவரைக் குறை கூறியவர்கள் 'கப் சிப்' ஆகிவிட்டனர்! மூன்று விக்கெட்டுகளைத் தொடர்ந்து வீழ்த்துவதோடு சந்தேகத்துக்கு இடமின்றி 'கிளீன் போல்ட்' செய்வது எந்தப் பந்து வீச்சாளருமே இதுவரை சாதித்திராத அற்புதம் என்கிறார்கள், கிரிக்கெட் விமர்சகர்கள். சர்மா பாட்டிங் மற்று ஃபீல்டிங்கிலும் சிறந்து விளங்குகிறார்.

கபில் தேவின் கண்காணிப்பில் வளர்ச்சி அடைந்த சேதன் சர்மா போல் பிஷன் சிங் பேடியின் கவனிப்பில் உருவானவர் மணீந்தர் சிங். பதினேழாவது வயதிலேயே டெஸ்டில் பிரவேசித்தார். இவர் முதிர்ந்த ஆட்டக்காரராக மலர்வதற்கு நிறையக் காலம் ஆகியிருக்கிறது. ஒரே ரன்னில் ஆஸ்திரேலியாவுக்கு எதிராக இந்தியா தோற்றதை இவர் தவிர்த்திருக்கலாம் என்று ரசிகர்களுக்கு இவர் பேரில் வருத்தமுண்டு. ஆனால் அவருக்கு முன்னால் ஆடிய முன்னணி பாட்ஸ்மென்களுள் யாரேனும் ஒருவர் அந்த ஒரு ரன் கூடுதலாக எடுத்திருந்தாலும் வெற்றி நமதாகியிருக்குமே!

தமிழகத்தைச் சேர்ந்த எல். சிவராமகிருஷ்ணன் தமது பதினேழாவது வயதில் டெஸ்ட் பந்தயங்களில் அறிமுகமாகி, தேர்


• அஜாருத்தீன்

வாளர்களின் எதிர்பார்ப்பைப் பூர்த்தி செய்யாமல் போனதால் அணியிலிருந்து நீக்கப்பட்டு, இப்போது மீண்டும் இந்திய அணியில் இடம்பிடித்துள்ளார். மெல்போர்னில் இந்தியா — ஆஸ்திரேலியாவுக்கிடையே நடந்த டெஸ்டில் மூன்று அபாரமான காட்சுகள் பிடித்துத் தமது ஃபீல்டிங் திறமையைக் காண்பித்துள்ளார்.

எல். சிவராமகிருஷ்ணனைப் போலவே, தேசிய அணிக்குத் தேர்வு செய்யப்பட்டு, பின் நீக்கப்பட்டு, பிறகு மீண்டும் தேர்வு செய்யப்பட்டுள்ள மற்றொரு ஆட்டக்காரர் நவ்ஜோத் சிங் சித்து — இந்த ஆண்டு ரஞ்சி, இரானி பந்தயங்களில் சிறப்பாக ஆடி, தியோதர் கோப்பைப் பந்தயத்தில் முன்னெப்போதையும் விடப் பிரமாதமாக ஆடி, தேர்வாளர்களின் நம்பிக்கையைத் திரும்பப் பெற்றார் சித்து. சமீப காலம் வரை இவர் தற்காப்பு உணர்வுடன், ஆட்டம் இழக்காமல் இருப்பதையே குறியாகக் கொண்டு விளையாடி வந்தார். இந்தக் கிரிக்கெட்


• சந்திரகாந்த் பண்டிட்

சீசனின் ஆரம்பத்தில்தான் அவருடைய அபாரமான 'ஸ்ட்ரோக்' திறமை வெளிப்பட ஆரம்பித்தது. ரிலையன்ஸ் கோப்பைப் பந்தயங்களில் தொடர்ந்து மூன்று அரை சதங்கள் எடுத்துள்ளார். சேப்பாக்கத்தில் இவர் அடித்த ஐந்து சிக்ஸர்கள் இன்னும் நெடுநாட்களுக்குப் பேசப்படுகிற விஷயமாகவே இருக்கும்.

தில்லி, வடக்கு மண்டல அணிகளுக்கு ஆடி, இந்திய அணியிலும் இடம்பிடித்துள்ள மனோஜ் பிரபாகர், ஒருநாள் கிரிக்கெட்டில் எடுத்துள்ள சராசரி ரன்கள் 43.25! ஆரம்ப பௌலிங் செய்வதைப் போல் ஆரம்ப பாட்டிங் செய்யவும் தகுதி பெற்றவர் இவர்.

இரண்டு விக்கெட் கீப்பர்களும் நல்ல பாட்ஸ்மென்னாகத் திகழ்வது, இந்தியாவின் அதிர்ஷ்டம். பரோடா ஆட்டக்காரரான கிரன் மோரே, பம்பாயைச் சேர்ந்த சந்திரகாந்த் பண்டிட் ஆகிய இரண்டு விக்கெட்


• மனீந்தர் சிங்

கீப்பிங் பாட்ஸ்மென்களுள், சந்திரகாந்த் பண்டிட் ஒருநாள் பந்தயங்களில் அதிக அனுபவசாலி; ஆனால் கிரன் மோரேக்குத்தான் ரிலையன்ஸ் கோப்பையில் அதிக 'கிராக்கி!'

ரிலையன்ஸ் கோப்பைப் பந்தயங்களில் நாம் காணும் ஒரு விநோதம், தமது மாநிலத்துக்கோ மண்டலத்துக்கோ பந்து வீசாத அஜாருத்தீன் இந்திய அணிக்கு இப்போது ஓர் உபயோகமான பந்து வீச்சாளராகத் திகழ்வதுதான்!

பொதுவாகவே, ஒருநாள் பந்தயங்கள் பிரபலமான பிறகு கிரிக்கெட் ஆட்டத்தில் விறுவிறுப்புக் கூடியிருப்பதுடன் ஃபீல்டிங் தரம் வெகுவாக உயர்ந்திருக்கிறது. சில வருடங்களுக்கு முன்னால் இத்தகைய காட்சுகளையும், ரன் தடுப்புகளையும் கற்பனைகூடச் செய்து பார்த்திருக்கமுடியாது. இப்போதோ, ஆட்டம் முடிந்து பெவிலியனுக்குத் திரும்பும்போது எல்லா ஆட்டக்காரர்களின்



● மனோஜ் பிரபாகர்

வெள்ளை உடைகளும், விழுந்து புரண்டதால் கறை படிந்து காணப்படுகின்றன!

ஒருநாள் பந்தயங்களில் மிகுந்த அனுபவம் உள்ள அணி இங்கிலாந்து. காரணம், ஒருநாள் கிரிக்கெட்டின் பிறப்பிடமே இங்கிலாந்துதான். முன்பு இங்கிலீஷ் கவுன்டி கிரிக்கெட் பந்தயங்கள் மூன்று நாட்களுக்கு நடத்தப்பட்டு வந்தன. மூன்று நாள் பந்தயம் அனேகமாக இரு தரப்பினருக்கும் வெற்றி தோல்வியின்றியே முடிந்துவிடும். இதனால் கிரிக்கெட் பந்தயங்களைப் பார்க்க வருபவர்கள் எண்ணிக்கை வெகுவாகக் குறைந்தது. போகப் போக 'இரண்டு மனிதர்களும் ஒரு நாயும்தான் பார்வையாளர்கள்' என்ற நிலை உருவாகிவிட்டது! இதற்குப் பிறகே, குறைந்த ஓவர்களைக் கொண்ட ஒருநாள் பந்தயங்களை நடத்தத் தீர்மானித்தனர். இப்படி நடத்தப்பட்ட முதல் பந்தயம் கில்லெட் கோப்பைப் பந்தயம்.

இந்தியாவில் ரிலையன்ஸ் கோப்பைப் பந்தயங்களை நடத்துவதால் வேறு என்ன நன்மை ஏற்பட்டதோ இல்லையோ, எல்லா கிரிக்கெட் மைதானங்களும் சீர் செய்யப்பட்டு முன்னெப்போதும் இல்லாத வகையில், முதல் தரமாகத் திகழ்கின்றன. இறுதிப் போட்டி நடைபெறவிருக்கிற ஈடன் கார்டன்ஸ் மைதானத்தில் எலக்ட்ரானிக் ஸ்கோர் பலகை சரியாகச் செயல்படவில்லை என்பதால் கையால் இயக்கக் கூடிய இரண்டு ஸ்கோர் பலகைகளைப் பொருத்தப் போகிறார்கள். இந்த இரண்டு ஸ்கோர் பலகைகளும் ஸ்டேடியத்தில் இரண்டாயிரம் இருக்கைகளின் இடத்தை ஆக்கிரமித்துக் கொண்டுவிடும் என்பதால் அந்த அளவிற்கு நஷ்டம்தான். இருப்பினும் மே. வங்க முதலமைச்சரே ஆர்வம் காட்டி இப்பணியை முடுக்கி விட்டுள்ளதால் நஷ்டத்தைப் பொருட்படுத்தாமல் கிரிக்கெட் அஸோசியேஷன் செயல்படுகிறது.

அதி அற்புதமான மூன்று அடுக்கு ஸ்டேடியம் இது. 'ஈடன் கார்டன்ஸில் ஒருவர் கிரிக்கெட் விளையாடாதவரை அவரை கிரிக்கெட் ஆடியுள்ளவராகவே கருத முடியாது'' என்று இதனை இங்கிலாந்து ஆட்டக்காரர் டோனி கிரெய்க் புகழ்ந்திருக்கிறார். முன்னாள் பாகிஸ்தான் அணி தலைவரும் இன்றைய விமர்சகருமான அப்துல் ஹபீஸ் கர்தாரோ, ஒருபடி மேலே சென்று, ''கிரிக்கெட்டின் தலைமையகத்தை லார்ட்ஸிலிருந்து ஈடன் கார்டன்ஸுக்கு மாற்றினால் என்ன?'' என்றே கேட்டிருக்கிறார்!



● கிரண் மோரே

இதே நேரத்தில், ''மைதானங்கள் பிரமாதமாக்கப்பட்டிருந்தாலும் ஆட்டக்காரர்களுக்குச் சரியான கழிப்பறை வசதிகள் இன்னும் செய்து தரப்படவில்லையே?'' என்று குறைபட்டுக் கொள்கிறார் சுனில் காவஸ்கர்!

தொகுப்பு: **குண்டுமணி**

புகைப்படங்கள்: **கே. என். சாரி**



● சேதன் சர்மா

# ஆர்.எம்.வீ. மீண்டும் அமைச்சரானது பற்றி...?



° புதுமொழி

* இடலை சுதா, குளத்தூர்.

? 'சினிமா பற்றிப் பத்திரிகைகள் மேம்போக்காக விமர்சிக்கின்றன; சினிமா மீடியத்தின் தர்மத்தைப் பற்றி மக்களுக்கு இதுவரை யாரும் சொல்லவில்லை; அதைச் சொல்லச் சரியான விமர்சகர்களும் இல்லை' என்று பாரதிராஜா குறை கூறியிருக்கிறாரே?

! சினிமா தர்மம் என்பது ஏதோ மகத்தான, மர்மமான விஷயமில்லை. காதலைப் போற்றலாம்; காமத்தை வளர்க்கக் கூடாது; வீரத்தை ஊட்டலாம், வன்முறையை ஊக்குவிக்கக் கூடாது; சமுதாய விழிப்புணர்ச்சியை உருவாக்கிச் சீர்திருத்தத்துக்கு வழி வகுக்கலாம், ஆனால் தடியெடுத்தவனெல்லாம் தண்டல்காரன் என்ற மனப்பான்மையை ஏற்படுத்தக் கூடாது; குற்றவாளி தப்பித்துவிட்டதாகக் காட்டக் கூடாது — இப்படிப்பட்ட சில அடிப்படைத் தர்மங்களை யதார்த்த அறிவுள்ள எவரும் புரிந்து கொண்டு பின்பற்ற முடியும். பின்பற்ற, திரை உலகில் பெரும்பாலோருக்கு மனமில்லை. சமுதாயப் பொறுப்புணர்வும் இல்லை என்பதே உண்மை.

* ப. மூர்த்தி, பெங்களூர்.

? கல்வி தலையங்கத்துக்குத் திராவிடர் கழகச் செயலாளர் வீரமணி மறுப்பு எழுதியிருந்தாரே, அதுபற்றி உமது கருத்து என்ன?

! மறுப்பு எழுத அவருக்குப் பூரண உரிமை உண்டு. அதில் வெறுப்புக் கலக்க வேண்டாம் என்பதே நமது கோரிக்கை.

* சேது புகழேந்தி, பழனி.

? தீபாவளியன்று உங்கள் மனத்தை நெருடிய விஷயம் ஏதும் உண்டா?

! புத்தாடை உடுத்தி, பட்சணம் சாப்பிட்டு, பட்டாசு கொளுத்தும் சிறுவர் சிறுமியரை வழி நெடுகப் பார்த்துக் கொண்டே போய், சென்ட்ரல் ஸ்டேஷனை அடைந்தேன். அங்கே களை சொட்டும் முகமுடைய ஒரு சிறுவன் கையில் பத்து பைசா காசை வைத்துக் கொண்டு காண்டீன்காரரிடம், 'ஸார், அன்னம்... அன்னம்...' என்று



° தனி ஒருவனுக்கு...



° MGR 4777

கெஞ்சுவதைப் பார்த்தேன்; அவர், 'போடா... போடான்னு...' என்று விரட்டுவதையும் கண்டேன். அந்தச் சிறுவனுக்கு அந்த வேளைக்கு என்னாலான உதவியைச் செய்து திரும்பிய போதிலும் அடுத்த வேளைக்கு அவன் என்ன செய்யப் போகிறான்? சுதந்திர இந்தியாவில் இன்னும் எத்தனை காலம்தான் இந்தக் கொடுமை நீடிக்கப் போகிறது?



° சினிமா தர்மம்...



° கல்விக்கு மறுப்பு

* கு. நாகராஜன், குருசாமிபாளையம்.

? 'தலைவர் கண் அசைத்தால் போதும், தமிழ் நாட்டில் உள்ள காங்கிரஸை நான் ஒருவனே பார்த்துக் கொள்வேன்' என முன்னாள் அமைச்சர் காளிமுத்து கூறியிருப்பது பற்றி...?

! ராபின் மெயினை அவர் சரியாகக் கவனித்துக் கொண்டாலே போதும். அதைச் செய்துவிட்டு மற்றவர்களை நெருங்கட்டும்.

* ஏ. கிரி, கும்பகோணம். *

? MGR 4777 கார் பற்றி?

! வேறு பல விஷயங்களில் போல் இதுவும் தவறான முன்னுதாரணம். தமிழக அரசின் காருக்கு — தமிழக முதல்வர் பயன்படுத்தும் காருக்கு — மோட்டார் வாகன வரியை மகாராஷ்டிர அரசிடம் கட்டுவது வெட்கக் கேடு. அவனவனும் இனி தன் பெயருக்கு ஏற்ப மாநிலம் மாநிலமாக அலையத் தொடங்கினால் போக்குவரத்துப் போலீஸ் தடுமாறும். தமிழக அரசு இது



* 11 விருந்து 3

போன்ற சிறுபிள்ளைத்தனமான, பைசா பெறாத காரியங்களைச் செய்வதில்தான் சுறுசுறுப்புக் காட்டுகிறது.

* ஸிங்கி அஹ்மது, சென்னை.

? சமாதானம் செய்யப் போனவருக்குக் கத்திக் குத்து என்று கேள்விப்பட்டிருக்கிறோம்; சமாதானம் செய்யப் போனவர் சேர்ந்து அடித்தார் என்று கேள்விப்பட்டதுண்டா?

! 'உன் சமாதானத் திட்டத்தை ஏற்கிறேன்; என்னிடமுள்ள கத்தியை உன்னிடம் ஒப்படைக்கிறேன்' என்று தந்திரமாகக் கூறிவிட்டுப் பிறகு, முதுகில் குத்தினால் பின் விளைவுகளை ஏற்கத் தயாராகத்தான் வேண்டும்.

* வி. முரளி, சென்னை — 15.

'எம். ஜி. ஆர். ஆட்சியில் தமிழ்நாடு

## நீங்கள் கேட்டவை — தராசு

தொழில் துறையில் பதினோராவது இடத்திலிருந்து மூன்றாவது இடத்துக்கு முன்னேறியுள்ளது என்று கலோசனா சம்பத் கூறியுள்ளாரே?

! இன்னும் கொஞ்ச நாள் இதே பதவியில் அவர் நீடித்தால் அகில உலகில் முதலாவது இடத்துக்கு வந்து விட்டதாகவே கூடச் சொல்வார்!

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? அழகு — இயற்கை பெண்ணுக்குத் தரும் சீதனமா? ஆபத்தின் சின்னமா?

! அது பயன்படுத்தப்படும் பக்குவத்தைப் பொறுத்த விஷயம்.

* ஆர். கே. அருள்செல்வன், விக்கிரபாண்டியம்.

? டி. வி. யில் கவர்ந்த நிகழ்ச்சி எது?

! சமீபத்தில் 'நாதங்கி.'

* டி. தாளை பிரபு, குடியாத்தம்.

? முதல்வர் வருகையில் திடீரென்று மாற்றம் செய்யப்பட்டது ஏன்?

! தேதி மாற்றத்துக்குக் காரணம், 'மேட்டூர் நீரை எப்போது திறந்து விடுவது' என்ற உலக மகாசிக்கலான பிரச்னையைக் கூட எம். ஜி. ஆர். அமெரிக்காவிலிருந்து திரும்பி வந்துதான் தீர்த்து வைக்க வேண்டும் என்று இங்கே அமைச்சரவை தீர்மானித்து விட்டதாக இருக்கலாம். விமானம் சென்னையில் தரையிறங்கும் நேரம் மாறியதற்குக் காரணம் ராகு காலம். வாழ்க, பெரியார், அண்ணா நாமங்கள்!

* எல். ஆர். சுந்தரராஜன், சென்னை — 28.

? ஆர். எம். வீ. மீண்டும் அமைச்சரானது பற்றி...?

! 'அமைச்சர், பதவி ஏற்கச் சென்றபோது ஆளுனர், கையை உடைத்துக் கொண்ட மாதிரி...' என்று ஒரு புது மொழி தோன்றக் காரணமாயிருந்திருக்கிறார்!

* ரூ. 15 பரிசு பெறுபவர்:

ஏ. கிரி,
16, சங்கோஜி பண்டிதர் தெரு,
மேலக்காவேரி,
கும்பகோணம் — 612 002.



# வேலில்லாத மரங்கள்

— சிவசங்கரி —

**5**

குருவி ஒன்று கண்ணாடிச் சட்டத்தில் தொத்திக் கொண்டு உட்கார்ந்து, கண்ணாடியில் பிரதிபலித்த தன் பிம்பத்தையே எதிரியாகக் கருதி, விடாமல் நக்நக்கென்று கொத்தி ஓசை எழுப்பியது.

அடுத்த அறை சுந்தரவதனத்தைத் தேடி விருந்தாளிகள் வந்திருந்ததில், அவ்வப்போது சிரிப்பு உரக்கக் கிளம்பி இவன் அறைக்குள் வியாபித்தது....

மாதவன் கண்களை மூடி உறக்கத்தைத் தொடரப் பார்த்தான். ம்ஹூம்.

இப்போது வசந்தா என்ன செய்து கொண்டிருப்பாள்?

தூங்கி எழுந்து அத்தைக்குச் சமையலில் உதவியாக இருப்பாளா?

அண்ணன் குழந்தையைக் குளிப்பாட்டிச் சீராட்டிக் கொண்டிருப்பாளா?

இல்லை. இன்னும் எழுந்திருக்கக்கூடச் செய்யாமல் படுக்கையிலேயே, ஞாயிற்றுக் கிழமை தரும் சோம்பேறித் தனத்தோடு புரண்டு, புரண்டு......?

ஓ!

இன்று ஞாயிறு....

அப்படியென்றால் காலையிலேயே தயாராகி, சர்ச்சுக்குப் போய் விடுவாள் இல்லையா?

வசந்தாவை நினைவிலிருந்து அகற்றும் உத்தேசத்தோடு எழுந்து உட்கார்ந்து, துரை சற்று முன் கொணர்ந்து வைத்துவிட்டுப் போன ஞாயிறு பேப்பரைக் கையில் எடுத்தான்.

செய்திகளைப் படிக்காமல் ஜோசியப் பகுதிக்குத் தாவினான்.

வேலையில் கவனமாய் இருக்க வேண்டிய நாட்கள். மாமூல் காரியங்களைத் தவிரப் புதிதாக எதையும் செய்ய முற்பட வேண்டாம். நண்பர்களிடமும், உறவினரிடமும் சுமுகமாக இருக்கப் பாருங்கள். லாட்டரியில் பரிசு விழ வாய்ப்பு உண்டு. இதுவரை சீட்டு வாங்காதவர் என்றால், துணிந்து வாங்கவும். ரொம்ப நாட்களாகக் குழப்பிக் கொண்டிருந்த பிரச்னைக்குத் தீர்வு உண்டாகும். . .

ஒரு தரத்துக்கு இரண்டு தரமாக ஜோஸிய குறிப்பைப் படித்தபோது மாதவனுக்குச் சிரிக்கத் தோன்றியது.

ஒரு தரம் ஹோட்டல் வாசலில் இருந்த எடை மிஷினில் ஏறி நின்று, அது தந்த அட்டையில் இருந்த எதிர்காலக் குறிப்பைப் பார்த்துவிட்டு வசந்தா சொன்னது திடுமென ஞாபகத்துக்கு வந்து, சிரிப்பை அதிகமாக்கியது.

"கர்ப்பமாயிருக்கிற பெண் கிட்ட, பிறக்கும் குழந்தை ஆணாக இருந்தாலும் இருக்கலாம், பெண்ணாகவும் இருக்கலாம்னு சொல்ற தினுசில் என்ன வழவழா ஜோசியம் இது. . . ."

உண்மைதானே?

புதுசாக எதுவும் செய்ய வேண்டாம் என்று அறிவுரை கூறும் அதே சமயத்தில் 'லாட்டரிச் சீட்டு வாங்கவில்லை என்றால் துணிந்து வாங்கு' என்றும் தூண்டிவிடுவதற்கு அர்த்தம் என்ன?

முதல் முறையாக எந்தக் காரியத்திலும் ஈடுபட வேண்டாம் என்றால், இது நாள் வரை வாங்காமல் இருந்துவிட்டு இப்போது லாட்டரிச் சீட்டு வாங்குவது மட்டும் புது காரியம் இல்லையா?

என்ன அசட்டுத்தனம் இது!

இப்படி எதையாவது எழுதித் தொலைத்துவிட்டு ஏற்கெனவே குழம்பி இருப்பவர்களை இன்னும் அதிகமாய்க் குழப்புவதே இவர்களுக்கெல்லாம் வேலையாகி விட்டது.

நான் மட்டும் மந்திரியாக இருந்தால் பத்திரிகைதனில் ஜோஸியப் பகுதியை நிறுத்தும்படி ஆணை. . . . .

சிந்தனை பாதியில் நின்றது.

நான் மந்திரியும் இல்லை, என்றாவது ஒரு நாள் ஆகப்போவதும் இல்லை... அப்புறம் என்னத்திற்காக வெட்டி கற்பனை?

அது என்னவோ சின்ன வயசிலிருந்தே ஒரு பக்கமாய், தனியாய், உட்கார்ந்து வேண்டாத கற்பனையில் மூழ்கி, நேரம் காலத்தை வீணடிப்பது ஒரு வழக்கமாகவே ஆகி விட்டது. . . .

சுய அலசல் சன்னமாய்த் தன்மீதே எரிச்சலை உண்டாக்க, பத்திரிகையைச் சுருட்டி, படுக்கைமேல் போட்டு விட்டு எழுந்து நின்றான்.

கண்ணாடியைக் கொத்திக் கொண்டிருந்த குருவியை விரட்டினான். அது அறையை ஒரு தரம் வட்டமடித்துவிட்டு மீண்டும் கண்ணாடி முன் உட்கார்ந்ததும் கொடியில் கிடந்த துண்டை எடுத்து வீசி 'ஷூ' என்று அடிக்குரலில் அதட்ட, குருவி நிஜமாய்ப் பயந்து போய் ஜன்னல் வழியாகப் பறந்து வெளியேறியது.

மாதவன் சலிப்போடு குளித்து, கண்ணாடியில் முகத்தைப் பார்த்துக் கொண்டான்.

இரண்டு நாள் தாடி. அயர்ந்து உறங்க முடியாததன் காரணமாய்க் கண்களடியில் உண்டாகியிருந்த கருவளையங்கள்.

என்ன ஆயிற்று எனக்கு?

எதற்காக ஜுரத்தில் விழுந்து எழுந்தவன் மாதிரிக் காணப்படுகிறேன்?

சாதாரணமாய் ஞாயிற்றுக் கிழமையென்றால், நிதானமாய் உறங்கி எழுந்து, அக்கடா என்று குளித்து, உண்டு, மாட்னி, மாலை என்று முடிந்தால் இரண்டு சினிமாவுக்கு நண்பர்களோடு போய்ப் பொழுதைச் சந்தோஷமாகக் கழிப்பவன் இன்று என்னத்திற்காக இப்படி சீக்காளி வேஷம் போடுகிறேன்?. . . .

சுருசுருவென்று கோபம் எழ, மாதவன் ஷேவிங் ரேஸர் சோப், பிரஷ்ஷை எடுத்து மேஜைமேல் வைத்தான். பானை ஜலத்தைக் குவளையில் ஊற்றி, பிரஷ்ஷைத் தோய்த்து, முகவாயில் தேய்த்தான். துளி சோப்பைத் தடவி நுரை புஸுபுஸுத்ததும், இடது கையால் காதருகே மேலே இழுத்துப் பிடித்து, கன்னத்தை உப்பி, ரேஸரால் மழுங்க வழித்தான்.

புத்தி ஏனோ மறுபடியும் வசந்தாவிடம் ஓடியது.

. . . . . . . . . . ."

"கொஞ்சம் அடர்த்தியா மீசை வச்சிகிட்டா இன்னும் ஹேண்ட்ஸமா, நல்லா இருப்பீங்கனு நா நினைக்கறேன் மாதவன்.. வச்சிக்கறீங்களா? ப்ளீஸ். . . எனக்காக?"

ஒருமாசம் முன்னால் ஒரு வித உரிமையோடு அவள் கூறியதை ஏற்று, சற்றே மெலிதாய் இருந்த மீசையை அடர்த்தியாக்கி



கவனத்தோடு இரண்டு நாட்களுக்கொரு தரம் ட்ரிம் பண்ணி..... 'என்னங்க வர வர டிரஸ் பண்ணிக்க ரொம்ப நேரம் எடுத்துக்கறீங்க?' என்று கண்களில் குறும்பு வெளிச்சம் போட, துரை கூடக் கேட்கும் அளவுக்குச் சதா கண்ணாடி முன் நின்று....

முகவாயை உயர்த்தி வேகமாய் ரேஸரை இழுத்தபோது உணர்ச்சிவசப்பட்டுப்போனதில் ரேஸர் லேசாகச் சதையைப் பதம் பார்க்க, வெட்டுபட்ட இடம் எரிந்தது.

ரேஸரைக் குவளைத் தண்ணீரில் போட்டுவிட்டு, முகத்தில் எஞ்சியிருந்த சோப்பை டவலால் அழுந்தத் துடைத்தான். அடிக்கழுத்தில் கீறல் விழுந்த இடம் சிவப்புக் கோடாக நிறம் மாறியிருந்தது.

துடைத்தான். எரிந்தது.

ஷெல்பில் வைத்திருந்த ஸாவ்லான் பாட்டிலை எடுத்து விரலால் தொட்டு, வெட்டுப்பட்ட இடத்தில் தீற்றினான்.

முதலில் எரிந்தது. அப்புறம் சில்லென்று சுகமாய் இருந்தது.

ஷேவ் செய்தது போதும் என்கிற தீர்மானத்துடன் நாற்காலியில் உட்கார்ந்தான்.

மனசு இருப்புக் கொள்ளாமல் வசந்தா, வசந்தா என்று அவளையே சுற்றி வந்து முணு முணுப்பது புரிந்தது.

கிட்டத்தட்ட நாலு நாட்களாக இதே அவஸ்தைதான்....

அன்று கடற்கரையில் 'ஆல்பர்ட்டுக்கு என்னைக் கட்டி வைக்க அண்ணன் துடிப்பாய் இருக்கிறார்' என்று கூறிவிட்டு 'நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?' என்று வசந்தா கேட்காமல் மௌனித்த நிமிஷத்திலிருந்து இதே சங்கடம்தான்....

வசந்தா......

அந்த அழகு முகம், கவர்ச்சியான உடம்பு.....

தோழமை நிறைந்த குணம்.... எப்போதும் உதட்டில் ஒட்டிக் கொண்டிருக்கும் சிரிப்பு.... இதெல்லாம் எனக்கு வேண்டுமா, வேண்டாமா?

கேள்வி பிறந்ததுமே மனசு, 'வேண்டும்!' என்று குரல் எடுத்துக் கத்தியது.

சரி, வேண்டுமென்றால் அந்தத் துடிப்பு எந்த அளவுக்கு என்னைத் துணிய வைக்கிறது?

தாலி கட்டி மனைவியாக்கி, ஊர் மெச்ச குடித்தனம் பண்ணிக் காட்டும் அளவுக்கு?

முடியுமா?

ஏன் முடியாது?

எத்தனையோ பெண்களை இத்தனை வருஷங்களாகப் பார்த்து, பழகியும் வசந்தா பேரில் உண்டான கவர்ச்சி, ஈடுபாடு வேறு யாரிடமும் உண்டாகவில்லை என்பதுதானே நிஜம்......?

நிஜமா, பொய்யா என்ற விவாதம் இருக்கட்டும்; வசந்தாவை மணப்பதென்பது நடைமுறைக்குச் சரிப்பட்டு வருமா?

அப்பா, அம்மா கிராமத்தைச் சார்ந்தவர்கள். வசந்தாவோ — வேலை பார்க்கும் நாகரிகமான ஒரு பெண். அதுவும் கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்தவள். இவளை அவர்களுக்குப் பிடிக்குமா? மனசுக்குப் பிடிக்காத மருமகளை ஏற்றுக் கொள்வார்களா? நானோ ஒற்றைப் பிள்ளை... அப்புறம்?......ம்ம்....?

வசந்தா அழகி, புத்திசாலி, கெட்டிக்காரி, நாகரிகமாய் என் மனசுக்கு ஏற்பப் பழகத் தெரிந்தவள்— என்று கெஞ்சி, கூத்தாடி, வாதாடி, அவர்களை ஏற்றுக் கொள்ளச் செய்ய முடியாதா?

'உன் சந்தோஷம்தான் எங்க சந்தோஷம்' என்று அடிக்கடி சொல்வீர்களே அது நிஜம் என்றால், வசந்தாவை மருமகளாக்கிக் கொள்ளுங்கள் என்று காலில் விழுந்து

## அடுத்த இதழில்...

நீலகிரி மாவட்டத்தில் கல்கி — 1

* பெண்கள் சினிமாவுக்குப் போகத் தடை!
—கவர் ஸ்டோரி

* ஆதரவு கேட்டு ஓர் ஆராய்ச்சி மணி!
— ஒரு தந்தையின் புலம்பல்!

* ஓமே, ஓமே, ஓ...மே... ஒரு விசிட்!

விட்டால்?

தனக்குத்தானே தீவிரமாய் யோசனை பண்ணியபோது, பெற்றவர்கள் எதை ஆட்சேபிக்கா விட்டாலும், மதம் விட்டு இன்னொரு மதத்திலிருந்து பெண் எடுப்பதைக் கண்டிப்பாக எதிர்க்கவே செய்வார்கள் என்பதை முதல்நாளே துல்லியமாகப் புரிந்து கொள்ள முடிந்தது. சரி, மேற்கொண்டு இதே ரீதியிலேயே சிந்தித்துக் குழம்புவதில் அர்த்தம் இல்லை—அடுத்த முறை வசந்தாவைச் சந்திக்கும்போது 'என் நிலைமையை நீ புரிந்து கொள்ள வேண்டும். நம் கல்யாணம் நடக்கும் காரியமாகத் தோன்றவில்லை. நானோ ஒற்றைப்பிள்ளை! பெற்றவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகள் நிறைய உள்ளன; ஆக, நண்பர்களாகப் பிரிந்து விடுவோம்' என்று உறுதியாய்க் கூறிவிடுவதைத் தவிர வேறு வழி இல்லை என்று ஒரு தினுசாய்த் தீர்மானித்தான்.

வசந்தாவை மறந்து விடுவதா?

'நண்பர்களாக இருப்போம்' என்று கூறிப் பிரிந்து விடுவதா?

எங்கே?

கண்ணை மூடினால் வசந்தா, திறந்தால் வசந்தா, உட்கார்ந்தால் வசந்தா, நடந்தால் வசந்தா, என்று அவனுடைய ஒவ்வொரு அசைவிலும் அவள் புகுந்து ஆக்ரமித்த பிறகு நண்பர்களாகப் பிரிவதாவது, மண்ணாங்கட்டியாவது.....

வசந்தாவைச் சந்திக்காமல் இருந்தால் ஒருவேளை குழப்பம் தெளியுமோ என்று நினைத்தவன் அடுத்து வந்த இரண்டு நாட்கள் லீவு போட்டுவிட்டு ஊரைப் பார்க்கப் போனான். ஒருநாள் முழுசாய்ப் போவதற்குள் இருப்புக் கொள்ளாமல் போக, "என் குட்டிப்போட்ட பூனையாட்டம் அல்லாடறே தம்பி? என்ன ஆச்சு உனக்கு? எதுக்காகச் சொல்லாம கொள்ளாம வந்தே — இப்ப எதுக்காகக் கால்ல வெந்நீர கொட்டிக்கிட்டு ஓடறே?" என்று அப்பா கேட்ட கேள்விகளுக்குப் பதில் கூறாமல் திரும்பப் புறப்பட்டு வந்தான்.

என்ன ஆனாலும் சரி, திங்கள் வரைக்கும் அவகாசம் எடுத்துக் கொண்டு, மறுபடியும் நடந்தவற்றை, நடக்க வேண்டியவற்றை அலசிப் பார்ப்பது என்று நேற்று இரவு புதுசாய் எடுத்திருந்த முடிவைச் செயலாக்க முடியாதபடி 'வசந்தா வசந்தா' என்று என்னமோ அவளைப் பார்த்துப் பேசி யுகம் ஆகிவிட்ட ரீதியில் நெஞ்சு ஏங்க, உட்கார்ந்திருந்தது போதும் என்று மாதவன் எழுந்தான்.

அவசரமாய்க் குளித்துத் தயாராகி, காலை டிபனைக் கூட உண்ணப் பிடிக்காமல் சர்ச்சுக்குப் போனான்.

உள்ளே நுழைந்து, எட்டாவது வரிசையில், தலையை வெள்ளைப் புடைவையின் தலைப்பால் மூடி இருப்பவளை அடையாளம் கண்டுகொண்டு, பிரார்த்தனை கூட்டம் முடியும் வரை ஒரு பக்கமாய் நின்றபோது... யதேச்சயாய்த் தலை நிமிர்ந்த வசந்தா இவனை இனம் கண்டு கண்களில் சந்தோஷம் வெளிச்சம்போட புன்னகைசெய்து,'எங்கே போய் விட்டீர்கள், நாலு நாட்களாய்? நான் தவித்துப் போனேன், போங்கள்' என்று கூறும் பார்வையாய்ப் பார்க்க, உள்ளத்தில் அது காறும் படர்ந்திருந்த சந்தேகம், குழப்பம், எல்லாம் பனிச்சென்று மறைகிற மாதிரியே மாதவனுக்குத் தோன்றியது.

(தொடரும்)






அந்தத் திரைப்பட விழாவுக்குப் பிரதான விருந்தினராக வர இருந்தவர் அமலா. குறித்த நேரம் கடந்தும் வரவில்லை. ஆங்கிலத்தில் வரவேற்புரை நிகழ்த்தியவர் சொன்னார்: "இரண்டு பேச்சாளர்கள் இருக்கிறார்கள்; இவர்கள் பேசி முடிப்பதற்குள் அமலா வந்தால் சரி, இல்லையெனில் the lady vanishes என்று வைத்துக் கொள்ள வேண்டியது தான்!"

இதைக் கேட்டுக் 'குபீர்' என்று அவையோர் சிரித்ததற்குக் காரணம் உண்டு. அன்று விழாவில் திரையிடப்படவிருந்த படத்தின் பெயர்: **The Lady Vanishes!**

மர்மப்பட மன்னர் ஆல்ஃபிரெட் ஹிட்ச்காக்கின் திரைப்படங்களுக்கென்றே, சென்னையில் இயங்கும் பிரிட்டிஷ், அமெரிக்கத் தகவல் நிலையங்கள் போட்டி போட்டுக் கொண்டு விழா எடுத்தன. ஹிட்ச்காக் பிரிட்டனில் பிறந்து வளர்ந்தவர். அவரது ஆரம்ப காலத் திரைப்படங்கள் அந்த நாட்டில் எடுக்கப்பட்டவையே. பிறகுதான் ஹாலிவுட்டின் அழைப்பை ஏற்று அங்கு சென்று பல படங்களைத் தயாரித்தார். அவரது ஆரம்ப காலப் படங்கள் எல்லாமே ஐம்பது அல்லது அறுபது ஆண்டுகளுக்கு முற்பட்டவை. இருப்பினும், இன்றைய பல தமிழ்த் திரைப்படங்களைப் பார்ப்பதைக் காட்டிலும் சுவாரஸ்யமாக இருந்தது மட்டுமல்ல; 'சினிமா நுணுக்கங்கள் நன்கு அபிவிருத்தி அடையாத அந்தக் காலத்திலேயே இவ்வளவு சிறப்பாக எடுத்திருக்கிறாரே' என்று ஆச்சர்யப்பட வைத்தன. இதிலிருந்து நாம் அறிந்து கொள்ளக் கூடிய பாடம், (அதாவது கற்றுக் கொள்ள விருப்பமிருந்தால்) சினிமாவின் வெற்றிக்கு அடிப்படை, கதை சொல்லும் ஆற்றலே என்பதுதான். டெக்னிகல் விஷயங்கள் எவ்வளவு சிறப்பாக இருந்தாலும் அதற்காக மட்டுமே படம் பார்க்க முடியாது. கதை கூறும் ஆற்றல் இருந்து விட்டாலோ டெக்னிகல் விஷயங்கள் இரண்டாம் தரமாக இருந்தாலும் பாதகமில்லை; படம் நின்று நிலைக்கும். ஐம்பது, அறுபது ஆண்டுகள் ஆனாலும் பார்த்து ரசிக்க வைக்கும்.

ஹிட்ச்காக் கதை கூறும் ஆற்றலைக் குறையின்றிப் பெற்றிருந்தாலும் அத்துடன் திருப்தி அடையவில்லை. டெக்னிகலாகவும் முன்னேற ஆசைப்பட்டார். அந்த ஆசை தான் அவரை பிரிட்டனிலிருந்து அமெரிக்காவுக்கு அழைத்துப் போனது. அதிலும் அவர் வெகு சாமர்த்தியமாக முன்னேறினார். இரு அம்சங்களும் இணைந்து அவரையும் அவரது கலையையும் அதி உன்னத நிலைக்கு உயர்த்தின.

"திரைப்படம் என்பது ஒரு புத்தகத்தின் விரிவாக்கமே" என்பார் ஹிட்ச்காக். இதிலிருந்து மூலக்கதைக்கு அவர் கொடுத்த முக்கியத்துவம் புரியும். "படிக்கும்போது மனத்தில் நிழலாகப் படிந்ததை நிஜமாக்குவது ஒரு டைரக்டரின் வேலை. அதுவே படத்தின் வெற்றிக்கு அடிப்படை."

ஹிட்ச்காக் எப்போதுமே இப்படி பாடம் போதிப்பது போல் பேசிக் கொண்டிருப்பதில்லை. அவரது விநோதமான பேச்சும் நடத்தையும் பற்றிய சில விவரங்கள் இந்த விழாக்களின் போது தெரிய வந்தன. உதாரணமாக, ஹிட்ச்காக்குக்கு டீ அருந்துவதென்றால் ரொம்பப் பிடிக்கும். இரண்டு மணி நேரத்துக்கு ஒரு தடவை ஒரு கப் டீ அவர் முன் வைக்கப்படும். ஹிட்ச்காக் கோப்பையிலிருந்து கடைசி சொட்டு வரை அருந்தி முடித்து விட்டுக் கோப்பையைத் தமது தோளுக்கு மேலாகப் பின்னால் விட்

டெறிந்து விடுவார்! கோப்பை உடையுமே அல்லது கோப்பையால் தாக்கப்பட்டு வேறு எதற்காவது சேதம் ஏற்படுமே என்று அவர் யோசிக்கவே மாட்டார்! இந்த வழக்கம் கடைசிக் காலம் வரை அவரைத் தொற்றிக் கொண்டிருந்தது!

ஒரு சமயம், சினிமாவில் நடிக்க வருகிறவர்களைப் பற்றி, ''மாட்டு மந்தை போன்றவர்கள்'' என்று அவர் குறிப்பிட்டார். இதைக் கேள்விப்பட்டதும் ஒரு பிரபல நட்சத்திரத்துக்கு ரொம்பக் கோபம் வந்து விட்டது. ஹிட்ச்காக்கிடம் நேரில் போய் விளக்கம் கேட்டார். உடனே ஹிட்ச்காக், ''தவறுதான், 'போன்றவர்கள்' என்று நான் சொல்லியிருக்கக் கூடாதுதான்'' என்றார்!

அந்த நட்சத்திரம் காலை உதைத்துத் தூள் கிளப்பிக் கொண்டு ஆத்திரத்துடன் வெளியேறினாலும் அடுத்த ஹிட்ச்காக் படத்தில் நடிக்க மறுக்கவில்லை!

ஒரு பிரப்லமான மர்ம நாவலைப் படமெடுக்க வேண்டும் என்று ஆசைப்பட்டார் ஹிட்ச்காக். அவர் தமது எண்ணத்தைச் செயலாக்கு முன்னர் வேறு ஒரு தயாரிப்பாளர் அந்த உரிமையை வாங்கிக் கொண்டு போய்விட்டார். ''என்ன, இப்படி பஸ்ஸைக் கோட்டை விட்டு விட்டீர்களே?'' என்றார் நண்பர்.

ஹிட்ச்காக்கின் அடுத்த படத்தில் முதல் காட்சியில் ஒரு பஸ் வந்து நிற்கும். ஹிட்ச்காக் தமது பருத்த சரீரத்துடன் ஓடி வந்து அதில் ஏற யத்தனிப்பார். ஆனால் படியில் கால் வைக்கப் போகும் விநாடியில் பஸ் கிளம்பிப் போய்விடும்!

தாம் தயாரிக்கும் படத்தில் தம்மைத் தாமே ஏதேனும் ஒரு காட்சியில் நுழைப்பதை விடாப்பிடியாக வழக்கமாகக் கொண்டிருந்தார் ஹிட்ச்காக். இதற்குக் காரணம் கேட்ட போது சொன்னார்: ''அதில் ஒரு ரகசியம் இருக்கிறது. என் படத்தைப் பார்க்க வரும் ரசிகர்கள், ஹிட்ச்காக் எந்தக் காட்சியில் வருகிறார் என்று கண்டுபிடிப்பதில் தீவிரக் கவனம் செலுத்துகிறார்கள். அதனால் நான் படத்தில் செய்துள்ள சில தவறுகளைக் கவனிக்காமலே விட்டு விடுகிறார்கள்! இது எனக்கு எவ்வளவு சௌகரியம்!''

ஹிட்ச்காக் கண்ணியமின்றி நடந்து கொள்வதும் உண்டு. 'ரெபெக்கா' என்ற படத்தில் கதாநாயகியாக நடிக்க ஒரு பிரபல நடிகையை ஒப்பந்தம் செய்வதாக இருந்தது. ஆனால் ஏதோ சில காரணங்களால் முடியாமல் போக, அவர் தங்கை, அவருக்குப் பதில் நடித்தார். தங்கைக்குச் சினிமா அனுபவமே இடையாது.

ஹிட்ச்காக் அவளை அவ்வப்போது தனியே அழைத்துப் போய், ''இந்த யூனிட்டில் எல்லாரும் என்ன பேசிக் கொள்கிறார்கள் தெரியுமா? 'உன் அக்காவைப் போட்டிருந்தால் படம் எவ்வளவோ சிறப்பாக இருக்கும்; உனக்கு ஓர் இழவும் தெரியாது. பூஜ்யம்' என்று பேசிக் கொள்கிறார்கள். படம் தோல்வி அடைந்தாலும் பரவாயில்லை; அதைவிட மோசம், எனக்குக் கெட்ட பெயரைச் சம்பாதித்துத் தரப் போகிறதாம்; நான் மறுபடி தலையெடுக்கவே முடியாமல் செய்துவிடப் போகிறாயாம் நீ!'' என்றெல்லாம் சொல்லி அவளைப் பயமுறுத்தி, அழவைத்து, நரம்புத் தளர்ச்சியே உருவாக்கி விட்டார்!

அந்தப் படம் அபார வெற்றி பெற்றது. காரணம், கதையின் கதாநாயகி பயந்த சுபாவம் உடைய பெண்மணி! நடிகைக்குப் பேரும் புகழும் குவிந்தன. ஹிட்ச்காக்குக்கும்தான்!

— குமரன்






கோடீஸ்வரன் ஒருவன் ராமகிருஷ்ண பரமஹம்சரைப் பாராட்ட வந்தான். "உங்களைப் போலத் துறவி உண்டா? ஆண்டவனுக்காக உலக இன்பத்தையே மறந்து விட்டீர்களே?" என்று புகழ்ந் தான். அப்பொழுது பரமஹம்சர், "நீ என்னைவிடப் பெருந்துறவி ஆயிற்றே. உலக இன்பத்துக்காகப் பகவானையே துறந்து விட்டாயே!" என்றார் சிரித்துக் கொண்டே.

ஆதாரம்: "அறிஞர்களின் வாழ்வில் நடந்த அதிசயங்கள்."

— ஏ. கே. நாசர்.



"வறட்சியைப் போக்க நடவடிக்கைஎடுக்கவில்லையென்றுகூறிய எதிர்க்கட்சியினரைப் பார்த்து நான் கேட்கிறேன். வங்கக் கடலில் புயலை மையம் கொள்ளச் செய்து மழையை உருவாக்கப் போகி றேமே, இப்போது என்ன சொல் லப் போகிறீர்கள்?"

— கடுவை கோபால்சாமி

மேடையில் அமைச்சர்:—

"மத்திய அமைச்சர்கள் இங்கு வந்து எங்களை விமர்சனம் செய்கி றார்களே! நாங்கள் டெல்லிக்குச் சென்று அவர்களை விமர்சனம் செய்ய எவ்வளவு நேரமாகும்?"

கூட்டத்தில் ஒருவர்:—

"அது ஃப்ளைட்டா, ட்ரெயினா என்பதைப் பொறுத்திருக்கு!"

— கடுவை கோபால்சாமி



நடிகை: "நடிப்புத் தொழிலுக்கு முழுக் குப் போட்டுவிட்டு, சமூக சேவையில் ஈடுபடலாம் என்று முடிவெடுத்திருக் கிறேன். அதுக்கு என்ன செய்யலாம்னு நினைக்கிறீங்க?"

நிருபர்: "வேறே எதுவும் செய்யத் தேவை இல்லீங்க. நீங்க நடிப்பதை நிறுத்தி யதே மிகப் பெரிய சமூக சேவை தான்."

— ஏ. கருணாநிதி








# பெண்கள் ஹாஸ்டலில் போராட்டம் எதற்கு?

"பல்கலைக்கழக ஹாஸ்டல் மாணவிகள் உண்ணாவிரதப் போராட்டம்" என்று 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' பத்திரிகையில் ஒரு குட்டிச் செய்தி வெளியாகி இருந்தது. இதன் பின்னணி என்ன என்று தெரிந்து கொள்வதற்காகச் சேப்பாக்கத்தில் உள்ள பட்ட மேற்படிப்பு, மற்றும் ஆராய்ச்சி மாணவிகளின் ஹாஸ்டலுக்குச் சென்றோம். .

மாணவிகள் யாரும் வாயைத் திறக்கப் பயந்தார்கள். "வேண்டாம்... நீங்கள் எங்களிடம் பேசினீர்கள் என்று தெரிந்தாலே எங்களைத் தூக்கி விடுவார்கள்" என்று ஒதுங்கிக் கொண்டார்கள். கடைசியாக ஹாஸ்டலை விட்டுத் திடீரென வெளியேற்றப்பட்ட ஆராய்ச்சி மாணவி ஒருவரைச் சந்தித்து விஷயங்களைக் கேட்டோம்.

"வயிற்றெரிச்சலைக் கிளப்பாதீங்க. அது ஹாஸ்டலா...? நாங்களெல்லாம் அங்கு அடிமைகள் போல நடத்தப்பட்டோம்" என்று ஆரம்பித்தார் அவர்.

அறுபத்தாறு அறைகளில் எண்பது மாணவிகள். அறையோ மிகச் சிறிது. தண்ணீர் வராத குழாய்கள். வெந்ததும், வேகாததுமாகச் சோறு. ஆராய்ச்சி மாணவிகளான நாங்கள், இரவு வெகுநேரம் கண்விழித்துப் படித்துக் கொண்டிருந்து விட்டுக் காலையில் சற்று லேட்டாகத்தான் எழுந்திருப்போம். அதனால் காலை காப்பி தரமாட்டார்கள். கேட்டால், 'காப்பி நேரம் முடிந்து போய் விட்டது' என்று சொல்லுவார்கள். அதே போல் சாப்பாட்டு நேரம் மத்தியானம் இரண்டு மணி வரை. யாராவது ஒரு நிமிடம் தாமதமாக வந்தாலும் சாப்பாடு 'அம்போ' தான். நாங்கள் எண்பது பேர். இதற்குப் பதினொரு ஊழியர்கள். இவர்கள் எங்களைப் பற்றிச் சகட்டுமேனிக்கு வார்டனிடம் 'ரீல்' சுற்றுவார்கள். யார் சாப்பாடு மீறும், பங்கு

# ஏழை நாடா, யார் சொன்னது...?



ராஜீவ் காந்தியின் சமீபத்திய கனடா மற்றும் அமெரிக்கா விஜயத்தின் போது ஆன செலவு, நாள் ஒன்றுக்கு ஒரு கோடி ரூபாய்! இதைத் தவிர பயணத்திற்காக, பிரத்தியேகமாக எடுத்துக் கொள்ளப்பட்ட இரு 'ஜம்போ' ஏர் இந்தியா விமானங்களின் கட்டண வசூல் இழப்புத் தொகை — நாளொன்றுக்குச் சுமார் நாற்பெத்தெட்டு லட்சம் ரூபாய். இத் தொகையைக் கொண்டு வறட்சியில் சிக்கித் தவிக்கும் ஐம்பதாயிரம் இந்திய கிராமங்களுக்குக் குடிநீர் வசதி செய்து கொடுத்திருக்க முடியும்.

— ஆதாரம்: இந்தியன் எக்ஸ்பிரஸ்
தகவல்: லதா.

---

போட்டுக் கொள்ளலாம் என்று காத்துக் கொண்டிருப்பார்கள். ஊழியர்கள் எங்களிடம் நடந்து கொள்ளும் விதத்தைப் பார்த்தால் நாங்கள் தான் அவர்களுக்கு ஊழியம் செய்ய அமர்த்தப்பட்டிருப்பது போல் தோன்றும். பெரிய குறை, விடுதியுடன் வார்டனுக்கு வீடு கிடையாது. இதனால் மாலையிலிருந்து மறுநாள் காலைவரை ஊழியர்களின் ராஜ்யம்தான். நேரடியாக உண்மைகளை உணர வார்டனுக்கே வாய்ப்பில்லை. எங்கள் பிரச்னைகள் பற்றி விவாதிப்பதற்காக 'மீட்டிங்' போடச் சொல்லிக் கேட்கும் போதெல்லாம் மாலை நாலரை மணிக்குக் கூட்டத்தைக் கூட்டுவார் வார்டன். நாங்களோ ஐந்து மணி வரை பல்கலைக்கழகத்தில் இருக்க வேண்டும். மீட்டிங் நேரத்தை மாற்றிக் கொள்ளும்படி பலமுறை கேட்ட போதும் மறுத்து விட்டார் வார்டன்!

"எங்களை யாராவது பார்க்க வந்தால் 'விஸிட்டர் ரூம்' கிடையாது. மழையோ, வெயிலோ வெளியில்தான் நின்று கொண்டு பேச வேண்டும். இரவு பத்து மணிக்கு மேல் டீ.வி. போட மாட்டார்கள். பல ஹாஸ்டல்களில் 'மெஸ் கமிட்டி' என்று இருக்கும். இங்கு அதெல்லாம் கிடையாது. நாங்கள் சாப்பிடாத நாட்களெல்லாம் கூட கணக்குப் போட்டு அதற்கும் பணம் வாங்கிக் கொள்வார்கள். நாங்கள் எண்ணூறு ரூபாய் டெபாஸிட் கட்டியிருக்கிறோம். ஆனால் ஒரு மாதம் விடுதிக் கட்டணத்தைக் கட்டாவிட்டால் அந்த மாதம் இருபதாம் தேதிக்கு மேல் சாப்பாடு போட மாட்டார்கள்!

"மற்றொரு மோசமான செய்கை, நாங்கள் லீவில் போகும் போது எங்கள் அறைக்கு இன்னொரு பூட்டுப் போட்டுப் பூட்டி வைப்பது. 'ஏன்?' என்று கேட்டால், நாங்கள் செய்யும் ஏதாவது சிறு தவறுகளைச் சுட்டிக் காட்டுவார்கள். மன்னிப்புக் கேட்டால்தான் அவர்கள் போட்டிருக்கும் பூட்டைத் திறப்பார்கள். ஹாஸ்டலில் மேலும் மேலும் மாணவிகளைச் சேர்ப்பதில் அக்கறை காட்டும் பல்கலைக்கழகம், வசதிகளைப் பெருக்காதது ஏன்?

இவையெல்லாவற்றையும்விட இன்னொரு கொடுமை — ஆராய்ச்சி மாணவிகளை இரண்டு வருடங்களில் 'கல்தா' கொடுத்து அனுப்பும் நிலை. இரண்டு வருடங்களில் எப்படி ஆராய்ச்சியை முடிக்க முடியும்? பல்கலைக்கழக மான்யக் குழுவே ஆராய்ச்சி மாணவிக்கு நான்கு வருடம் மான்யம் தருகிறது. பல்கலைக்கழகம் ஐந்து வருட காலத்தில் ஆராய்ச்சியை முடித்தால் போதும் என்கிறது. இப்படிப்பட்ட நிலையில் எங்களை இரண்டு வருடங்களில் வெளியே அனுப்பினால் நாங்கள் எங்கு போய்த் தங்குவது? இந்தப் பிரச்னைகளைப் பற்றிப் பலமுறை பல்கலைக்கழக அதிகாரிகளிடம் எடுத்துக் கூறியும் தீர்வு கண்டபாடில்லை. அதனால் தான் உண்ணாவிரதப் போராட்டம்" என்று சொல்லி முடித்தார் அவர்.

'கல்கி'யில் இந்தச் செய்தி வெளிவந்து விட்டதே, இதை யார் கொடுத்திருப்பார்கள்? என்று ஆராய்ச்சி செய்யும் வேலையைப் பல்கலைக்கழக அதிகாரிகள் விட்டு விட்டு, ஹாஸ்டல் மாணவிகளின் பிரச்னைகளைப் போக்க முன்வருவார்களா?

— ப்ரியன்

புகைப்படம்: கே. வி. ஆனந்த்

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.

நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: 431543, 434157.

ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை — 600 034. போன்: 473389.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 280/-; விமானத் தபால் ரூ. 680/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 140/-; விமானத் தபால் ரூ. 340/-.

# டீ உலகில் உயர் வட்டம்

# சக்கரா டீ

உயர் வகுப்பினர் பாராட்டும்
தேநீர்ச் செல்வம் சக்கரா டீ.
சொகுசான சுவைமண, திட
குணங்களின் முழுமை
வட்டம். தேநீரிலே
சுக போகத்தின் உயர்
வட்டம்: சக்கரா டீ.

உயர் வட்ட ரசிகர்களுக்கு
உயர் வளமுள்ள தேயிலை

## சக்கரா டீ






டாட்டா டீ லிமிடெட்

உலகிலேயே மிகப்பெரிய டீ கம்பெனி.

daCunha/TT/246/87/TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

## வினாடிகளில் நிவாரண மளிக்கும் பாம்!






### ஜண்டு பாம்

ஜலதோஷம், தலைவலி மற்றும் நோவுகளிலிருந்து துரித நிவாரணம்

OFFICIALLY SELECTED BY RELIANCE CUP '87

## ZANDU BALM




CRICKET FOR PEACE

ஜண்டு பாம் பலவகை வலிகளையும் நீக்குவதில், இதர பாம்களைவிட, அதிக சக்தி வாய்ந்த வலி நிவாரணி.

தலைவலி, ஜலதோஷம், தசைப்பிடிப்பு, மூட்டுவலி, மற்றும் சுளுக்கு ஆகியவைகளிலிருந்து நிவாரணமளிக்கிறது.

ஜண்டு பாம் ஈடு இணையற்றது: நிறமற்றது—அதனால் கறை படியுமோ என்ற பயமில்லை. பிசுபிசுப்பற்றது—அதனால் வீட்டிலோ வெளியிலோ உபயோகிக்கலாம். நறுமணமும் கொண்டது. ஜண்டு பாம் வீரியமிக்க ஃபார்முலா கொண்டதால் குறைவாக உபயோகித்தால் போதும். அதனால் சிக்கனமானது. மிருதுவான சருமத்திற்கும் உகந்தது. அதனால்தான் தாய்மார்கள் தங்கள் குழந்தைகளுக்கு ஜண்டு பாமையே தடவ விரும்புகிறார்கள்.

*சீசாவின்மேல் இருக்கும் சிகப்பு சீலைப் பார்த்து வாங்குங்கள்.*

# ஜண்டு பாம்

# வலிகளை நீக்கும் பாம்

Z-2-87 TAM